## B. *Resolutions.*

### (1) RENAMING MADRAS STATE AS "TAMILNAD"—*cont.*

DEPUTY SPEAKER : The discussion on this resolution will continue now.

**Sri P. S. CHINNADURAI** : மதிப்பிற்குரிய கனம் உதவி சபா நாயகர் அவர்களே . . . . . . . . .

**Sri M. KALYANASUNDARAM** : **On a point of order, Sir.** சென்றமுறை இந்த விவாதம் வந்தபோது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இத்தீர்மானத்தை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. ஒன்று வாபஸ் வாங்கவேண்டும். அல்லது ஒத்திப் போடவேண்டும் என்று சொன்னார். இப்போது இதை விவாதத்திற்கு எடுத்துக்கொள்வதாக இருந்தால் அப்போதுள்ள தடைகள் இப்போது இல்லை, அப்போதுள்ள பிரச்னை இப்போது இல்லை என்று அவர் கருதுகிறாரா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : I do not know how Sri M. Kalyanasundaram could object when it has been included in the agenda.

**Sri P. S. CHINNADURAI** : மதிப்பிற்குரிய கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நம்முடைய நாட்டிற்குத் 'தமிழ் நாடு' என்று பெயரிடுவதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று சர்க்காரை வேண்டிக்கொள்கிற இந்தத் தீர்மானத்தை நான் ஏற்கனவே பிரேரணை செய்து அதன்மீது இப்படி பெயர் மாற்றம் செய்வதற்குரிய காரணங்களையும் அதற்கான சந்தர்ப்பம் எப்படி பொருத்தமாக இருக்கிறது என்பதைக் குறித்தும் ஓரளவுக்குச் சொல்லியிருக்கிறேன். அதற்குப் பிற்பாடு நான் கைந்து மாதங்கள் கழிந்துவிட்டன.

(Mr. Speaker in the Chair.)

அரசாங்கம் இந்தத் தீர்மானத்தின் கருத்துக்களை ஏற்றுக் கொண்டு அதற்குரிய அறிவிப்புகளைச் செய்திருப்பார்களேயானால் பல கோடிக்கணக்கான மக்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள். அதற்குப் பதிலாக இந்தத் தீர்மானத்திலே குறிப்பிட்டிருக்கிற கருத்துக்களுக்கு முரண்பட்ட முறையிலேகூட சர்க்கார் தரப்பில் இருந்து அறிவிப்புகள் ஆங்காங்கு பொதுக்கூட்டங்களின் வாயிலாக எழுந்தது. அது மிகவும் வருந்துவதற்குரிய விஷயம் என்று தெரிவிக்க விரும்புகிறேன். இந்தச் சபையில் அத்தீர்மானம் விவாதத்திற்கு வந்த பிற்பாடு, தமிழரசுக் கழகம் இதுபற்றிய ஒரு போராட்டத்தைத் துவக்கி, சாத்வீகமான முறையில் அக்கிளர்ச்சிகளை ஆங்காங்கு நடத்தி வருகிறது. நல்லவேளையாக அந்தப் போராட்டம் இப்போது நிதி அமைச்சர் அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்க நிறுத்தப்பட்டிருக்கிறது. அவர்கள் போராட்டத்தை நிறுத்துவதற்கு ஏற்ற முறை

24th February 1961] [Sri P. S. Chinnadurai]

யில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் நல்ல நம்பிக்கை ஊட்டியிருப்பார்கள் என்று நம்புகிறேன். (கனம் ஸ்ரீ. சி. சுப்ரமணியம்.—அப்படி ஊகிக்க வேண்டாம்) கனம் நிதி அமைச்சர் அவர்கள் அப்படி ஊகிக்க வேண்டாம் என்கிறார்கள். ஒருகால் அதைத் தம்முடைய வாயிலாக இரண்டு மணி நேரத்திலே இங்கேயே சொல்லப் போவதனால் மற்றவர்கள் ஏன் ஊகிக்க வேண்டும், தாமே முதலில் சொல்லியதாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு சொல்வார்களானால் என்னுடைய ஊகம் தவறு என்று ஒப்புக்கொள்ளவும் நான் தயாராய் இருக்கிறேன்.

இந்த மாநிலத்திற்குத் 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்க வேண்டும் என்பது பெரும்பாலான மக்களுடைய அபிப்பிராயம் என்பதில் துளிக்கூடச் சந்தேகம் இல்லை. எல்லா அரசியல் கட்சிகளுடைய அபிப்பிராயமும் அது. பல்வேறு அரசியல் கட்சிகள் இக் கருத்துக்குச் சாதகமாக பலவிடங்களில் இத்தீர்மானத்தை அடுத்தடுத்து நிறைவேற்றி வந்திருக்கிறது என்பதையும் நான் இங்கே சர்க்காருக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். காங்கிரஸ் கட்சியைப் பொறுத்த வரையில் இந்த மாநிலத்திற்குத் 'தமிழ் நாடு' என்று பெயரிட வேண்டுமென்று வெளிப்படையாகப் பத்திரிகையில் வராதுபோனாலும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி என்று இந்த மாநில கிளை ஸ்தாபனத்திற்கு நாமகரணம் அந்தக் காலத்திலேயே சூட்டியிருப்பது அவர்களுடைய தீர்க்கதரிசனத்தைக் காட்டுகிறது என்று ஒப்புக்கொள்கிறேன். ஆகையால் ஆளுகிற காங்கிரஸ் கட்சி உள்பட எல்லாக் கட்சிகளும், பல்வேறு பஞ்சாயத்துகளும், நகராட்சி மன்றங்களும், சென்னை நகர மன்றங்களும், தமிழ் புலவர்களும், மற்றவர்களும் எல்லோருமே 'தமிழ் நாடு' என்று பெயரிடவேண்டும் என்ற கருத்தை ஒப்புக்கொண்டு ஆங்காங்கே வலியுறுத்தி வருகின்றனர். ஆகவே இனியும் பெயர் மாற்றுவது காலதாமதம் செய்வது சரியாக இருக்காது என்று சொல்ல விரும்புகிறேன். அப்படியிருக்க இதற்குத் 'தமிழ் நாடு' என்ற பெயர் எப்போதுமே இருந்ததில்லை என்று சொல்லி சிலர் வாதிட முயற்சிக்கின்றதைப் பார்க்கிறேன். 'தமிழ் நாடு' என்றால் பாண்டிய நாடுதான் என்று எடுத்துக்கூற விரும்புகிறவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். எப்படி இருந்த போதிலும் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, கொங்குநாடு, தொண்டைநாடு என்று பல நாடுகள் அக்காலத்தில் இருந்தாலும் எல்லாம் தமிழ்நாட்டிலேயே இருந்திருக்கின்றன. அந்நாடுகள் அனைத்தும் தமிழ்நாட்டின் பகுதிகளாகத்தான் இருந்திருக்கின்றன என்பதில் ஐயம் இல்லை. இவையெல்லாம் ஆட்சியாளர்களுக்குத் தெரியாது என்று நினைத்து நான் எடுத்துக்கூறுவதாக எண்ணினால் தவறு. எல்லாம் தெரிந்ததுதான். தெரியாததே இல்லை. ஏதோ ஒரு காரணத்திற்காக மறந்துவிட்டார்கள். மறந்து இருப்பதை நினைவுபடுத்தினால் அதற்காகப் பாராட்டுத் தெரிவிப்பதற்குப் பதிலாக எடுத்துக் கூறுபவர்கள்மீது கோபப்படுவது முறையாகாது, சரியாகாது என்று சொல்ல விரும்புகிறேன். இது அவர்களுடைய நினைவில் இருந்து தப்பியதன் காரணமாக நாம் எடுத்துக் கூறும்போது இப்படிப்பட்ட

[Sri P. S. Chinnadurai] [24th February 1961

பெயர் வரலாற்றிலேயே இல்லை, இலக்கியத்திலேயே இல்லை என்று கூறி ஒரு ஆத்திரம் அடைவதற்கு அரசாங்கத்திற்கு அவ்வளவு ஏற்றதல்ல என்று சொல்ல விரும்புகிறேன். (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்டராமன் :—ராஜ்யம் அந்த மாதிரி தனியாக இல்லை என்று சொன்னார்கள். இலக்கியத்தில் இல்லையென்று சொல்லவில்லை) அதுவும் கனம் முதல் அமைச்சர் அவர்கள் இலக்கியத்திலே தமிழ்நாடு என்ற சொல் கிடையாது என்று பேசியதாகப் பத்திரிகையில் மிக விரிவாக வந்தபோது எனக்கே சந்தேகம் வந்துவிட்டது. முதல் அமைச்சர் அவர்களா அப்படிச் சொன்னார்கள்? அப்படிச் சொல்லியிருப்பார்களா? அல்லது பத்திரிகை நிருபர்கள் அவர் கருத்தைத் தவறாகப் புரிந்துகொண்டு அப்படி எழுதிவிட்டார்களா? அல்லது பத்திரிகை நிருபர்கள் சரியாக எழுதியிருப்பதாகவே வைத்துக் கொண்டாலும் பத்திரிகாலயத்தில் இத்தகைய தவறுதலை ஏற்படுத்திவிட்டார்களா என்றெல்லாம் நான் ஐயப்பட்டேன். கனம் முதல் அமைச்சர் அவர்கள் சபைக்கு இன்று வருவார்கள் என நினைக்கிறேன். கனம் முதல் அமைச்சர் சார்பாக பதில் அளிக்க இருக்கிற கனம் நிதி அமைச்சர் அவர்களாவது கனம் முதல் அமைச்சர் அப்படிச் சொன்னாரா இல்லையா என்பதை விளக்கவேண்டும். அதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அவர்கள் உண்மையில் அப்படிச் சொல்லியிருப்பாரானால் நான் அவர்களுக்கு என்ன சொல்ல? கோவைக் கம்பன் என்ற பெயர் பெற்ற கனம் கருத்திருமன் அவர்களைத் தன் கட்சிக் கொறடா வாக வைத்திருக்கிற கனம் முதல் அமைச்சர் அவர்கள் அப்படிச் சொல்லியிருப்பார் என்று எப்படி எதிர்பார்க்கலாம்? கம்ப ராமாயணத்தில் அதற்குச் சான்றுகள் இருக்கின்றன என்று கோயம்புத்தூர் கம்பன் நிச்சயமாக எடுத்துரைக்க தவற மாட்டார்.

அது போக மற்றும் சிலப்பதிகாரம், மணிமேகலை, பரிப்பாடல், பதிற்றுப்பத்திலும் அதற்கான சான்றுகள் இருக்கின்றன என்று ஆணித்தரமாக தகுந்த முறையிலே அவ்வுறை கொடுக்க கனம் குழந்தை அம்மாள் அக்கட்சியிலே இருக்கிற போது நான் அந்த புஸ்தகங்களைத் தேடி அலைந்து எடுத்துக்கொண்டு வந்து எந்தப் பாடலிலே எந்த வரியிலே அவைகள் வந்திருக்கின்றன என்று சொல்லவேண்டிய அவசியம் இருக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். மேலும், கனம் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அந்தப் பக்கத்தில் இருக்கிறார்கள். பண்டிதராகிய அவர்கள் அதை நல்ல முறையில் நினைவுப்படுத்துவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் இலக்கியத்திலே இதற்கு சான்றுகள் கிடையாது என்று இனியேனும் சர்க்கார் தரப்பிலே இருந்து யாரும் சொல்ல முன்வரக் கூடாது என்பதுதான் நான் மிகுந்த பணிவுடன் கேட்டுக்கொள்வது.

தமிழ்நாடு என்று பெயர் வைப்பதானது உணர்ச்சியைப் பொறுத்த விஷயம் என்பதையும் நான் சொல்ல விரும்புகிறேன். காரணங்கள் எவையாக இருந்தபோதிலும் உணர்ச்சிக்கு அதிக

24th February 1961] [Sri P. S. Chinnadurai]

முக்கியத்துவம் அளிக்க இந்தச் சபையின் அங்கத்தினரும் சர்க்காரும் தயங்க மாட்டார்கள் என்பது என்னுடைய நம்பிக்கையாகும். பிரிட்டிஷ் அரசியார் சென்னைக்கு வந்தார்கள். அவர்கள் வந்த காலத்திலே ராஜாஜி மண்டபத்தில் அளித்த வரவேற்பில் கனம் அங்கத்தினர்களுக்கு தகுந்த இடத்தை ஒதுக்கவில்லை என்ற அளவிற்கு தங்கள் வருத்தத்தைத் தெரிவிக்கும் நிலையில் 10 நிமிஷம் சபைக்கு வராமலே இருந்து தங்களுடைய வருத்த உணர்ச்சியை வெளிப்படுத்தியதை கண்கூடாகக் கண்டோம். அவர்களுடைய தராதரங்களைக் குறித்து நான் இங்கு ஆராய விரும்பாது போனாலும் அந்த உணர்ச்சியை நான் மதிக்கிறேன். அவர்களுக்கு உரிய இடத்தை அளிக்கவில்லை என்பதற்குக் காரணம் எதுவாக இருந்தபோதிலும் அவர்கள் தங்களுடைய வருத்த உணர்ச்சியை வெளிப்படுத்தியதை வரவேற்கத்தக்கது, பாராட்டத்தக்கது. இனிமேலாவது அப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நிகழாமல் பார்த்துக்கொள்ளத்தக்கது என்பதில் சந்தேகம் இல்லை. இந்த ஒரு பிரச்சனைக்கே கனம் அங்கத்தினருக்கு இவ்வளவு உணர்ச்சி இருக்குமானால் அந்த வருத்த உணர்ச்சியே இவ்வளவு கடுமையாக உடனடியாக வெளிப்படுத்த வேண்டுமென்ற அளவிற்கு உணர்ச்சி இருக்குமானால் சென்னைக்குத் 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்காவிட்டால் எவ்வளவு கடுமையான வருத்த உணர்ச்சி இருக்கும் என்பதை அரசாங்கத்தார் சிந்தித்துப் பார்க்க வேண்டும். வெள்ளைக்காரர்கள் காலத்தில் தமிழ் மாநிலத்திற்கு 'தமிழ்நாடு' அல்லது 'தமிழகம்' என்ற பெயராலே அழைக்கப்படுவதற்கு உரிய ஏற்பாடுகள் அவர்கள் செய்யத் தவறிய காலத்தில் தமிழன்னை தவித்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. வேறு வழி இல்லாமல். ஆனால் நம்முடைய ஆட்சி நடக்கும்போது சொந்த மக்கள் ஆட்சி நடக்கும்போது தங்களுடைய மக்கள் தன்னை சரியான பெயரிட்டு அழைக்காமல் இருப்பார்களானால் அழைக்கத் தவறுவார்களானால், அழைக்க மறுப்பார்களானால் தமிழ் அன்னையினுடைய வருத்த உணர்ச்சி எவ்வளவு கடுமையானதாக எவ்வளவு வருத்தம் உடையதாக இருக்கும் என்பதை சற்றே சிந்தித்துப் பார்க்க வேண்டும். கனம் அங்கத்தினர் எல்லோரும் இதில் முனைவார்கள் என்பது என்னுடைய நம்பிக்கை. இனியும் தாமதப்படுத்துவது சரியல்ல.

'தமிழ்நாடு' என்று பெயரிடுவதற்கு மத்திய சர்க்கார் குறுக்கிடுவதாக இல்லை என்று மத்திய சர்க்கார் மந்திரி திரு ஏ. கெ. சென் அறிவித்திருக்கிறார்கள். 'தமிழ்நாடு' என்று பெயரிட்ட உடனே தனியாகத் தமிழ்நாட்டை பிரித்துக்கொண்டுப் போய்விடுவார்கள் என்று அப்படி எண்ணுவதற்கு ஆக்கம் அளித்துவிடுமோ என்ற பயம் எவருக்காவது இருக்குமானால் அந்த பயத்திற்கு ஆதாரம் இல்லை என்று நான் சொல்ல விரும்புகிறேன். தமிழ்நாடு என்று பெயரிட்ட உடனே மாநிலத்தை பிரித்துக்கொண்டு போய் விடக் கூடிய அளவிற்கு அங்கே மக்கள் தயாராக இல்லை. அந்தக் காரணத்தைக் கொண்டும் பாரதத்திலிருந்து பிரிந்து போக தமிழ்நாட்டிலுள்ள மக்கள் தயாராக இல்லை என்று இந்தச் சபை

யில் நான் மறுபடியும் உறுதியாக எடுத்துக்கூறி 'தமிழ்நாடு' என்று பெயரிடுவதற்காக ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்றும் அதை சர்ச்சைக்கு உரியதாக ஆக்கக்கூடாது. கட்சி பிரச்னையாக ஆக்கக்கூடாது, யார் சொல்லுகிறார்கள் என்று பார்க்கக்கூடாது என்றும் "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அழகு" (குறுக்கீடு) அறிவு என்று சொன்னால் கொஞ்சம் கடுமையாக இருக்கும் என்பதற்காக அதை மாற்றி அதுதான் அழகு ஆன்றோர்க்கென்று குறிப்பிட்டு இந்தத் தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றிக்கொடுக்க வேண்டுமென்று இந்தச் சபையின் அங்கத்தினர்களை நான் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். இதில் சர்க்கார் கட்சித் தலைவருக்கு மிகுந்த பொறுப்பு உண்டு. அந்தப் பொறுப்பு சரிவர அவர்கள் நிறைவேற்றுவதை தமிழ்நாடு இன்றைக்குக் காணட்டும். பாரதம் இன்றைக்கு அதைப் பார்க்கட்டும் என்று சொல்லி என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, நண்பர் சின்னதுரை அவர்கள் பிரேரேபித்த தீர்மானத்தை முழுமனதோடு ஆதரிக்கிறேன். இத்தகைய தீர்மானம் ஒன்றை பிரேரேபிக்க வேண்டியதும், இதை ஓட்டுக்கு விட வேண்டிய அவசியம் ஏற்படாதது ஒன்று என்பது என்னுடைய அபிப்பிராயம். இதை அரசாங்கமே . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: இதை நான் ஒப்புக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொஞ்சம் பொறுமையோடு பின்னால் என்ன சொல்லப் போகிறேன் என்பதைப் பார்க்கவேண்டும். அரசாங்கத்திற்கு அதிக பொறுப்பு. அவர்களே இந்த முடிவு எடுத்து அரசியல் சட்டத்தை திருத்துவதற்கு மத்திய அரசாங்கத்திற்கு யோசனை கூறி இருப்பார்களானால் இதைப்பற்றி சில கட்சிகள் கிளர்ச்சி செய்யவும், மக்களிடத்திலே அதிருப்தியும் அதற்கெல்லாம் சந்தர்ப்பமே இல்லாமல் போய் இருக்கமுடியும் என்று மத்திய சர்க்கார் அமைச்சரே கூறியிருக்கும் பதிலிலிருந்து தெரிகிறது. அரசியல் சட்டத்தை திருத்தவேண்டுமென்று பார்லிமெண்டில் உள்ள அங்கத்தினர்கள் கோரியிருக்கிறார்கள். உத்தியோகப் மசோதா ஒன்றுகூட பிரசுரிக்கப்பட்டது என்பதை சமீபத்தில் அறிந்தோம். இதற்கெல்லாம் மத்திய அரசாங்க அமைச்சர் என்ன சொல்லுகிறார் என்றால் இது சென்னை அரசாங்கத்தின் பொறுப்பு இதைத் திருத்த வேண்டுமென்றால் சென்னை அரசாங்கமும், சென்னை மக்களும் திருத்திக்கொள்ளட்டும் இதற்கு நாங்கள் குறுக்கே நிற்க இஷ்டப்படவில்லை என்று தெளிவாகச் சொல்லி விட்டார்கள். சிக்கல் நம்முடைய அரசாங்கத்தினிடத்திலேதான் இருக்கிறது என்ற காரணத்தினால் இந்தத் தீர்மானத்

24th February 1961] [Sri M. Kalyanasundaram]

திற்கு அவசியம் ஏற்படுகிறது என்பதை அவர்களுக்கு நான் ஞாபகப்படுத்துகிறேன். இந்தத் தீர்மானத்திற்குக் காரணம் எதிர்க்கட்சியைச் சேர்ந்த கனம் சின்னதுரை, கல்யாணசுந்தரம் இவர்கள் அல்ல. அமைச்சர்களாக இருக்கக்கூடியவர்கள் இத்தகைய தீர்மானம் வருவதற்கும் கிளர்ச்சிகளுக்கும் காரணம் என்பதை அவர்களுக்கு நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

அப்படி தமிழ்நாட்டில் 1956-ம் வருஷத்திலிருந்து இதற்கான கிளர்ச்சிகள் இருந்திருக்கின்றன. அங்கங்கே எல்லா கட்சிகளும் இதை ஆதரிக்கிறார்கள். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் கட்சியின் பேரில் சொல்லாவிட்டாலும் தனிப்பட்ட முறையில் காங்கிரஸ் கட்சியை சேர்ந்தவர்கள் இதை நியாயமான கோரிக்கை என்று ஒப்புக்கொள்கிறார்கள். இந்த சபையில்கூட கட்சி கட்டுப்பாடு இல்லாமல் இந்தத் தீர்மானத்தின்மீது சுதந்திரமாக வோட்டு அளிப்பதற்கு சர்க்கார் கட்சித் தலைவர் உரிமை அளிப்பாரானால் நான் நிச்சயமாக நம்புகிறேன் இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்படும் என்பதில் யாதொரு ஆட்சேபணையும் இல்லை. மந்திரிகள் ஆட்சேபிக்கலாம்—இன்றைக்கு என்ன காரணம் இருந்ததோ அது என்றால் சொல்ல முடியாது—ராஜ்ய புனரமைப்புக்குக் காரணமாக அமைச்சர்கள் இதை ஆட்சேபிப்பதற்குக் காரணம் இருந்திருக்கலாம். அப்போது ஒரு சிலர் மிச்சம் இருக்கும் ராஜ்யத்திற்கு மெட்ராஸ் என்று பெயரிடக்கூடாது என்று ஆட்சேபிப்பதற்காக அப்படிச் செய்திருக்கலாம். இது போட்டியின் காரணமாக இருக்கலாம். 1956-ம் ஆண்டில் சட்டம் அமுலுக்கு வந்து மொழி அடிப்படையிலே ராஜ்யங்கள் அமைக்கப்படவேண்டுமென்ற கொள்கை ஒப்புக்கொள்ளப்பட்டு இருக்கின்றன. சட்டங்கள் நிறைவேற்றப்பட்டு அநேகமாக இன்று தேசம் பூராவும் மொழியின் அடிப்படையில் ராஜ்யங்கள் அமைந்துவிட்டன என்று நாம் சொல்லிக்கொள்ளலாம்.

மகாராஷ்டிரம், குஜராத் பிரிந்த பிறகு அநேகமாக எல்லாம் பிரிந்துவிட்டன என்று நாம் நிச்சயமாக சொல்லலாம். மஹாராஷ்டிரமும், குஜராத்தும்கூட பிரிந்துவிட்டன. இன்னும் சில பகுதிகளில் தகராறு இருந்து கொண்டிருக்கிறது. இனமும், மொழியும் மிக நுட்பமான பிரச்னைகள். அது சம்பந்தமாக அதிருப்தி வளர நாம் இடம் கொடுக்கக்கூடாது. வேறு காரணங்களுக்காக அதிருப்தி இருப்பதை பயன்படுத்திக் கொண்டு மக்களிடையே தவறான எண்ணத்தையும், அதிருப்தியையும், கிளர்ச்சிகளையும் ஏற்படுத்துவதற்குள்ள சந்தர்ப்பம் இருக்கிறது என்பதை வட இந்தியாவில் நடக்கும் சில நிகழ்ச்சிகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ள முடியும். பெயர் மாற்றம் என்பது ரொம்ப சாதாரண விஷயம். அதற்கு செலவு எதுவும் இல்லை. அதில் தவறும் இல்லை. ஆகவே, ஏன் இதில் இவ்வளவு பிடிவாதமாகயிருக்கிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. கனம் நிதியமைச்சர் அவர்கள்கூட இன்று காலையில் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்தினார்கள். எல்லை சம்பந்தமாக 10–30 a.m.

[Sri M. Kalyanasundaram] [24th February 1961

புதிதாக எந்த கோரிக்கையையும் நாம் போடப்போவதில்லை, வேறு யார் அந்தக் கோரிக்கையை வைத்தாலும் அதை அனுமதிக்கப் போவதில்லை என்றும் கூறினார்கள். அதோடு எனக்கு உடன்பாடு உண்டு. இதற்கு முன்பே கூறியிருக்கிறார்கள், எல்லை சம்பந்தமாக இனி எந்தவித கிளர்ச்சியையும் அனுமதிக்க மாட்டோம் என்று. இது அப்பேர்ப்பட்ட கிளர்ச்சியும் அல்ல. எல்லை சம்பந்தமான எந்தவித கிளர்ச்சியும் இனி இருப்பது நியாயமானதல்ல. இந்தியா ஒன்று, நாம் இந்தியர்கள் ஒன்று என்ற எண்ணம் பிரதானமாகயிருக்க வேண்டுமென்ற எண்ணத்திலேயே 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்கவேண்டுமென்ற கோரிக்கையை ஆதரிக்கிறேன். தமிழ்நாடு என்பது தனி நாடு, அது தனியாக பிரிந்து போக வேண்டும் என்று யாராவது சொன்னால் அப்பேர்ப்பட்ட கோரிக்கை அக்கிரமமானது, என்பது என் அபிப்பிராயம், அதுதான் கம்யூனிஸ்ட் கட்சியின் அபிப்பிராயமும். தனியாக பிரிந்து போகவேண்டும் என்பதை கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கவில்லை. தனியாகப் போவது தமிழ் நாட்டிற்கு நன்மை பயக்காது, அது பெரிய தீங்கைத்தான் இழைக்கும், கடலிற்கு அப்பாலிருக்கும் தமிழ் மக்களுக்கு இத்தகைய போக்கு பெரிய ஆபத்தைத்தான் உண்டாக்கும், அப்படிச் சொல்பவர்கள் பொறுப்பற்றவர்களாகத்தான், பொறுப்பற்ற தமிழர்களாகத்தான் இருக்க முடியுமே தவிர பொறுப்புள்ள தமிழர்களாக இருக்க முடியாது. அவர்கள் தமிழ்நாட்டின் மீது அக்கரையுள்ளவர்களாக இருக்க முடியாது என்பதுதான் கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்து. தமிழ்நாடு என்று பெயரிடுவது நியாயமான கோரிக்கை, அப்படி தமிழ் நாடு என்று பெயரிடாததால் அது தீய சக்திகளுக்கு ஊக்கம் அளிக்கிறது என்பதை நாம் உணரவேண்டும். மத்திய அரசாங்கத்தில் உள்ள அமைச்சர்களிடையேகூட இதுபற்றி, இதிலுள்ள வித்தியாசத்தை புரிந்து கொள்ள முடியாமல் ஒரு குழப்பமான நிலை ஏற்பட்டிருக்கிறது. 'தமிழ்நாடு' என்று பெயரிடுவதால் வேறு எந்த ராஜ்யத்தோடும் அல்லது எந்த நாட்டோடும் ஒருவித சிக்கலும் ஏற்படுத்தாத பிரச்னை. அதே சமயத்தில் அது ஒற்றுமையை வளர்க்கும் பிரச்னையுமாகும். ஆகவே, இது அவசிய அவசரமுமாகும். இத்தகைய சிறிய பிரச்னையை வைத்துக்கொண்டு ஏன் நாட்டில் கிளர்ச்சிகள் நடைபெற விடவேண்டும். 1956-ல் பழைய சட்டசபை முன்பு ராஜ்ய புனரமைப்பு மசோதா விவாதத்தில் இருக்கும் சமயத்தில்கூட இதற்குள்ள திருத்தம் கொடுக்கப்பட்டது. இப்பொழுது ஆளும் கட்சியில் இருக்கும் விநயகம் அவர்கள் பேரில் அந்தத் திருத்தம் இருந்தது, அப்பொழுது அவர்கள் எதிர்கட்சியில் இருந்தார்கள். எங்கள் கட்சியைச் சார்ந்த கனம் ராமலிங்கம் அவர்கள் பேரிலும் இதுபற்றி ஒரு திருத்தம் இருந்தது. அதை ஆவலோடு ஆதரித்தார் கனம் விநயகம் அவர்கள். அப்பொழுதுள்ள ப்ரொஸீடிங்ஸை எடுத்துப் பார்த்தால் தெரியும், கனம் விநயகம் அவர்கள் அந்தத் திருத்தத்தை ஆதரித்து ஓட்டு அளித்திருப்பதை. அதே சமயத்தில் 1957-ல் கவர்னர் அவர்கள் உரை மீது விவாதம் நடந்த

24th February 1961] [Sri M. Kalyanasundaram]

சமயத்தில் பழனிச்சாமி அவர்கள்பேரில் கொண்டு வந்த தீர்மானத்தை எதிர்த்து வோட்டு அளித்தார்கள் விநாயகம் அவர்கள், கட்சி மாறியதின் காரணமாக, கட்சி மாறுபாட்டின் காரணமாக, இந்த விபரீதத்தையும் பார்க்கலாம். இது ஒரு கட்சிப் பிரச்னையல்ல.

THE HON. SRI C. SUBRAMANIAM : கட்சி மாறுவது கனம் விநாயகத்தின் தனி உரிமை என்பது போல் பேசக்கூடாது. பலர் அந்த உரிமையை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : 'தமிழ்நாடு' என்று பெயரிடும் கோரிக்கை 1956-ம் ஆண்டுக்கு பிறகு நியாயம். 1956-க்கு முன்னர்கூட கேட்டோம் என்று கூறலாம். அப்படியிருந்தால் அது அக்கிரமான கோரிக்கை. 1956-க்கு முன் மலையாளம் கன்னடம் பேசுகிறவர்கள் நம் சட்டசபையில் இருந்தார்கள். அப்பொழுது தமிழ்நாடு என்று பெயரிடவேண்டுமென்று சொல்வது மற்றவர்களின் உணர்ச்சியை அவமதிப்பதாகும். 1956-க்கு முன்பு நமது ராஜ்யத்திற்கு 'தமிழ்நாடு' என்று பெயரிட வேண்டுமென்று சொல்லியிருந்தால் அது இன, மொழி வெறியின் காரணமாக சொல்லப்பட்டது என்று ஆகும். 1956-க்குப் பிறகு 'தமிழ்நாடு' என்று பெயர் இடவேண்டுமென்று சொல்வதை மறுப்பது அக்கிரமமாகும். 1956-க்குப் பிறகு என்ன பிரச்னை இருக்கிறது ? தமிழ் பேசும் பெரும் பகுதி தமிழ் நாட்டில் வந்து விட்டது. ஒரு சில பகுதிகள் அங்கும் இங்கும் இருக்கலாம், நம் ராஜ்யத்தில் கன்னடம், தெலுங்கு பேசுகிறவர்கள் இருப்பதைப் போன்று. தமிழ்நாட்டின் எல்லை நிர்ணயிக்கப்பட்டுவிட்டது, அதுவும் படாஸ்கர் அவார்ட்டுக்கு பிற்பாடு வேறு சில இடங்கள் வந்து தமிழ்நாட்டின் எல்லை நிர்ணயிக்கப்பட்டு விட்டது. நம் எல்லை இதுதான். அப்படி தகராறுக்கு இடமில்லாமல் எல்லை நிர்ணயித்த பிற்பாடு 'தமிழ்நாடு' என்று பெயரிடாமல் இருப்பதற்கு நியாயமான காரணம் எதுவும் காட்ட முடியாது. சம்பந்தமில்லாத காரணங்களைக் கூறுகிறார்கள் அமைச்சர்கள். அதுதான் ஆச்சரியம். அமைச்சர் அவர்கள் இது குறித்து என்ன பதில் சொல்லப்போகிறார்களோ ? இதற்கு முன் சொன்ன பதில்கள் ஞாபகத்தில் இருக்கிறது. பல கூட்டங்களில் பேசுகையில் தங்களுக்கு சாதகமான அபிப்பிராயத்தைத் திரட்ட முயற்சித்திருக்கிறார்கள், பலஹீனமான முயற்சி. தமிழ் இலக்கியத்தில் தமிழ் ராஜ்யம் என்று இருந்திருக்கிறதா என்று கனம் வெங்கட்ராமன் அவர்கள் திருத்தமாக கூறியிருக்கிறார்கள். தமிழ் ராஜ்யம் என்று இருந்ததில்லை என்று சொன்னதாக பத்திரிகையில் பார்த்தேன். தமிழ் ராஜ்யம் பல ராஜ்யங்களாக இருந்திருக்கலாம். பாண்டிய ராஜ்யம், சோழ ராஜ்யம் எல்லாம் தமிழ் ராஜ்யங்கள்தான். வெள்ளைக்காரன் வருவதற்கு முன்பு இந்தியா ஒரே நாடாக இருந்ததே கிடையாது என்றுதான் பிரிவினையைக் கோரக் கூடியவர்கள் இன்னும் சொல்

கிறார்கள். குமரி முதல் காஷ்மீர் வரையில் ஒரே ஆட்சியின்கீழ் கொண்டு வந்தது பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பிறகுதானே தவிர அதற்கு முன் பல பிரிவுகளாக இருந்தன.

**The Hon. Sri R. VENKATARAMAN :** அவர்கள்கூட கொண்டு வரவில்லை, சர்தார் பட்டேல்தான் கொண்டு வந்தார்கள்.

**Sri M. KALYANASUNDARAM :** திருத்தத்தை ஒப்புக் கொள்ள ஆட்சேபணையில்லை. தேசிய இயக்கம்தான் அந்த ஒற்றுமையைக் கொண்டு வந்தது, என்று சொன்னால் ஒப்புக் கொள்கிறேன். வெள்ளைக்காரன் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்ற கோஷம் வந்ததே, அதுதான் இந்தியா பூராவும் ஒன்று என்ற உணர்வை வளர்த்தது என்று கூறினால் அது இன்னும் பொருத்தமாகயிருக்கும். அந்த மனப்பான்மைதான் இன்னும் இருக்கவேண்டும். ஏகாதிபத்தியத்திலிருந்து விடுதலை பெற்று சுதந்திரமாக வாழவேண்டுமென்றும், மக்கள் சுபீட்சமாக இருக்கவேண்டுமென்றும், கலாசாரத் துறையிலும் அடிமையாக இருக்கக்கூடாது என்ற நோக்கத்தோடு ஒன்றாக இருந்து விடுதலை பெற்றோம். பிளவு சக்திகள் தலை தூக்க நாம் இடம் அளிக்கக் கூடாது. காந்திஜி எழுதியதை நான் நிதியமைச்சர் அவர்களின் ஞாபகத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

"My plea is for banishing English as a cultural language of India . . . The rich English language will ever retain its natural place as an international speech of commerce and diplomacy"—*Harijan*, dated 21st September 1947.

சுதந்திரம் அடைந்து பிறகு எழுதியிருக்கிறார்கள், ஹரிஜனில் 21-9-1947-ல் கலாசாரத் துறையில் சுதந்திரமாக இருக்கவேண்டும். ஆங்கிலத்தை கலாசாரத் துறையிலிருந்து அகற்றவேண்டும். பிரிட்டிஷ் ஆட்சியை எப்படி அரசியல் துறையிலிருந்து அகற்றினோமோ அப்படி கலாசாரத் துறையிலிருந்து ஆங்கிலத்தையும் அகற்றவேண்டுமென்று காந்திஜி 1947 செப்டம்பரில் ஹரிஜனில் அழுத்தந்திருத்தமாக எழுதியிருக்கிறார்கள். விடுதலை அடைந்த பிறகு நமக்கு பல லட்சியங்கள் உண்டு. விடுதலையோடு நமது லட்சியங்கள் முடிவடைந்து விடவில்லை. நமது லட்சியங்களுக்கு அந்நிய ஆதிக்கம் முட்டுக்கட்டையாகயிருந்ததால் அதை எதிர்த்தோம். மொழி அடிப்படையில் ராஜ்யங்கள் அமைய வேண்டும், அநேகமாக அந்த லட்சியம் பூர்த்தியாகி விட்டது. தமிழ்நாட்டில் இப்படிப் பெயரிடுவதை ஆட்சேபிப்பதற்கு ஒரு காரணமும் கிடையாது. அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள், தமிழ்மொழியை போதனை மொழியாக்கி, அதை ஆட்சி மொழியாக்கி தமிழ் மொழிக்கு உரிய இடத்தை கொடுத்து விட்டு பிறகு தமிழ்நாடு என்று பெயரிட்டால் போதும் என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னதாகக் கேள்விப்பட்டேன். அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை துரிதமாக எடுப்பதற்கு இந்த சபையில் யார் அவர்கள் கையைப் பிடித்தார்கள்? இந்த சபையில் இதற்கு ஆதரவு

24th February 1961] [Sri M. Kalyanasundaram]

கொடுக்கப்பட்டது, அதை எதிர்க்கட்சியினர் வலுவாக ஆதரிக்கிறார்கள். வெளியில் வேண்டுமானால் சிலர் ஆட்சேபிக்கலாம். ஆங்கிலத்தை கலாசாரத் துறையிலிருந்து அகற்றவேண்டுமென்று காந்திஜி எழுதியிருப்பதை காங்கிரஸ் அங்கத்தினர்கள் படிக்க வேண்டும். தேர்தல் சமயத்தில் மட்டும் காந்திஜியை ஞாபகப் படுத்திக் கொள்ளாமல் ஒவ்வொரு பிரச்னை வரும்போதும் அவரை ஞாபகத்தில் கொண்டு நடந்தால் நாட்டிற்கு நன்மையளிக்கும் அது, என்பதை இன்று காங்கிரஸை ஆதரிப்பவர்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். எதிர்காலத்தைப் பற்றி யோசித்துத் தான் அவர்கள் மொழிபற்றி எழுதினார்கள். ஆகவே தமிழ் மொழிக்குரிய இடம் கொடுக்கவேண்டும், துரிதமாக அதற்கு நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்று அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இதற்கு இந்த சபையைப் பொறுத்த வரையில் எப்போதும் அதை ஆதரித்துத்தான் வந்திருக்கிறார்கள். ஆகவே தமிழ் மொழிக்கு முதலிடம் கொடுப்பது வரைக்கும் ஒத்திபோட வேண்டும் என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இரண்டாவதாக, முதல் அமைச்சர் அவர்கள் இதை இப்போது அவசரமாக எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள். இதை விட்டு விட்டாலும் நாட்டில் அவசரமாக எடுக்க வேண்டிய நடவடிக்கைகளை இந்த சர்க்கார் என்ன எடுத்துக்கொண்டது, விலைவாசிகள் உயர்ந்து கொண்டிருக்கிறது, அதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும், விவசாயிகளுக்கு பலன் தரக்கூடிய பல சட்டங்களை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. இவைகள் எல்லாம் எங்கே அவசரமாக எடுக்கப் படுகின்றன? ஆகவே இந்த தமிழ்நாடு என்று பெயர் வைப்பதினால் வேறு எந்த அவசரமான காரியங்களுக்கும் முட்டுக்கட்டை ஏற்பட்டுவிடாது. சர்க்கார் வேண்டுமென்றே இதை தடுத்து நிறுத்த வேண்டாம், கிளர்ச்சி செய்து கொண்டிருக்கட்டும், வேறு பல கிளர்ச்சிகளிலிருந்து எதிர்க்கட்சிகளுடைய கவனம் திரும்பட்டும், அதன் காரணமாக பொதுமக்களுடைய அதிருப்தியை இந்தத் துறையில் திருப்பி விடலாம் என்று நினைத்துத்தான் இந்த சர்க்கார் காலதாமதப்படுத்துகிறதோ என்றுகூட நான் சந்தேகப் படுகிறேன். கனம் முதல் அமைச்சர் அவர்களுடைய பதிலிலிருந்து புரிந்து கொள்ளக்கூடியது என்னவென்றால், வேறு எவ்வளவோ அவசரமான பிரச்னைகள் இருப்பது போலவும், இது அவ்வளவு முக்கியமான பிரச்னை அல்ல என்ற அடிப்படையில் பேசியிருக்கிறார்கள். உண்மையிலேயே 'தமிழ்நாடு' என்று பெயர் நமது நாட்டுக்கு வந்துவிட்டால் நாட்டிலுள்ள பஞ்சம், பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம் இவைகள் எல்லாம் போய்விடும் என்று யாரும் சொல்லவில்லை. 'தமிழ் நாடு' என்று பெயரிட்டால் தமிழ் மக்கள் தாங்களும் தங்களது சொந்த மொழியிலேயே தங்களுடைய நாட்டினுடைய பெயரை வைத்திருக்கிறோம் என்ற உணர்ச்சியோடு இருப்பார்கள். தமிழ் மக்கள் இந்திய யூனியனில் தாங்களும் சுய அந்தஸ்தோடு இருப்பதற்கு மட்ராஸ் என்று இருப்பது சரியல்ல. அரசியல் சட்டத்தில் மட்ராஸ் என்று சொல்லப்பட்டிருப்பது உண்மைதான். ஆனால் அதன்பிறகு மற்ற எல்லா ராஜ்யங்களும் பிரிந்தன. கேரளம் என்று பிரிக்கப்பட்டது.

[Sri M. Kalyanasundaram] [24th February 1961

ஆந்திரம், வங்காளம், ஒரிசா அதன் பிறகு பம்பாய் பிரிக்கப்பட்ட பிறகு மகாராஷ்டிரம், குஜராத் என்றெல்லாம் பிரிக்கப்பட்டு இப் போது அந்த பெயரிலேயே வழங்கப்பட்டு வருகின்றன. ஆனால் மட்ராஸ் என்பது எந்த அடிப்படையில் வழங்கப்படுகிறது. சென்னை ராஜ்யத்தின் தலைநகரின் பெயர் மட்ராஸ் என்று இருந்தது, அதை தொடர்ந்து வைத்துக்கொண்டிருக்கிறோம். சட்ட சபையில்கூட நமது நிதி அமைச்சர் அவர்கள் முன்பு சொன்னார் கள், மட்ராஸ் என்றால் உலகம் பூராவும் தெரியும், தமிழ்நாடு என்று சொன்னால் வெளிநாட்டில், இந்தியாவில் எங்கிருக்கின்றது என்று கேட்பார்கள், என்று சொன்னார்கள். அடிக்கடி வெளிநாடுகளில் சென்று கொண்டிருக்கும் கனம் தொழில் அமைச்சர் அவர்கள்கூட சொன்னார்கள், "மகாராஷ்டிரம் என்பது இந்தியாவில் எங்கே யிருக்கிறது என்று வெளிநாட்டில் கேட்பார்கள்" என்று சொன் னார்கள். அதற்காக சென்னை என்கிற பெயரை தமிழ்நாட்டின் தலை நகரத்திற்கு இருக்கட்டும், அதை யாரும் மாற்ற வேண்டும் என்று சொல்லவில்லை. மெட்ராஸ் என்பதுதான் உலகத்தில் பிரபல்யமாகி யிருக்கிறது என்று சொன்னால் இந்த பெயரையே சென்னை நகரத் திற்கு வைத்துக்கொள்ளலாம். ஆகவே 'தமிழ்நாடு' என்று பெயர் வைப்பதினால் வெளிநாடுகளில் எங்கேயிருக்கிறது என்பது தெரி யாமல் போகும் என்று சொல்வது சரியல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன், மாறுதல் ஏற்பட்டால் எந்த இடத்திலுமே கொஞ்சம் கஷ்டம் இருக்கத்தான் செய்யும். நயா பைசா கொண்டு வந்தோம், இப்போது கிலோ மீட்டர்கள், கிலோ கிராம் முறைகளை கொண்டு வந்திருக்கிறோம். இதனால் பொது ஜனங்களுக்கு கொஞ்சம் கஷ்டம் இருக்கலாம், அதற்காக நல்ல மாறுதல்களை வேண்டாம் என்று சொல்லமாட்டார்கள். ஜனங்களுக்கு கஷ்டம் இருந்தால் அந்த முட்டுக்கட்டைகளை கொஞ்சம் போக்கி யாகத்தான் வேண்டும். அன்றைக்கு நமது இந்திய தேசத்திற்கு பெயரிடும் போது அன்றைக்கு கேபினட்டில் முடிவு செய்த போது முஸ்லீம் தலைவர்கள் எல்லாம் இந்தியா என்று பெயரிடக் கூடாது, பாரதம் என்றுதான் இருக்கவேண்டும் என்று வலியுறுத் தினார்கள். அன்றைக்கு ஆந்திரத் தலைவர்கள்கூட சென்னையைப் பற்றி குறுகிய மனப்பான்மையுடன் சொல்லிக் கொண்டிருந் தார்கள். முஸ்லீம் தலைவர்கள் பாரதம் என்று இருக்கவேண்டும் என்று வற்புறுத்தியதின் பேரில் இன்றைக்கு அரசியல் சட்டத்தில் கூட "India that is Bharat" என்று முதல் பாராவில் சொல்லப்பட்டிருக்கிறது. பாரதம் என்று சொல்லுவதால் வெளி நாட்டில் அதற்கு எந்தவிதமான குறைவும் ஏற்பட்டுவிடவில்லை. தமிழ்நாடு என்று பெயரிட்டுவிட்டு அதற்குப் பின்னால் வேண்டு மென்றால் பிராக்கட்டில் 'மெட்ராஸ்' என்று போட்டுக் கொள்ளுங் கள். அதற்கு யாரும் எந்தவிதமான ஆட்சேபணையும் சொல்லமாட் டார்கள். தமிழ் நாட்டு மக்களுடைய கோரிக்கையை ஒப்புக் கொள்ளக்கூடிய அளவில் ஏதாவது சொல்லவேண்டும், அது அல்லா மல் வேறு காரணங்களை சொல்லுவது என்றால் அமைச்சர்கள் உண்மையிலேயே ஏதாவது உள் நோக்கத்தோடுதான் சொல்லு கிறார்கள் என்றுதான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான்

24th February 1961] [Sri M. Kalyanasundaram]

நினைக்கிறேன். எல்லாக் கட்சிகளும் சேர்ந்து கேட்கின்ற ஒரு முக்கியமான பிரச்னை இது. இதில் கிளர்ச்சி இருக்கிறது, ஆகவே இதை கவனிக்க மாட்டோம் என்று அன்றைக்கு சொன்னார்கள். இன்று தோன்றியதல்ல கிளர்ச்சி. 1956-வது வருஷத்திலேயே ஆரம்பித்துத்தான் இப்போது கிளர்ச்சி வந்திருக்கிறது. அதிலும் இந்தப் பிரச்னையில் இந்தச் சபையில் இல்லாத ஒரு கட்சி இந்தக் கிளர்ச்சியை ஆரம்பித்திருக்கிறது. அந்த சமயத்தில் இந்த கிளர்ச்சி நடந்து கொண்டிருக்கிறது என்ற காரணத்திற்காக அன்றைக்கு அதை விவாதிக்க மறுத்து விட்டார்கள். அதனால் ஏற்பட்ட நிகழ்ச்சிகளையும் நாம் பார்த்தோம். இதை இப்போதாவது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள முன் வந்ததை நான் வரவேற்கிறேன். எந்தக் கிளர்ச்சியாக இருந்தாலும், நியாயமான கோரிக்கைகளுக்காக அரசாங்கம் பின்வாங்கிப் போவது அழகல்ல. கிளர்ச்சி இருந்தாலும் இல்லாவிட்டாலும் நியாயமாக இருக்கக் கூடிய கோரிக்கைகளை அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும். பிரச்னை நியாயமாக இல்லாவிட்டாலும்கூட கிளர்ச்சி இருந்தால் அரசாங்கம் பணிந்துவிடும் என்று இருப்பதும் சரியல்ல. அவ்வாறு இருந்தால் கோரிக்கை நியாயமாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, கிளர்ச்சி இருந்தால்தான் அரசாங்கம் ஒப்புக் கொள்ளும் என்ற நிலை வந்துவிடும். இதற்கு முன்பு பல நிகழ்ச்சிகள் கிளர்ச்சிகளின் மூலமாகத்தான் நடைபெற்றிருக்கின்றன. ஆந்திர ராஜ்யமும் கிளர்ச்சியினால்தான் வந்தது, பொட்டி ஸ்ரீராமுலு உண்ணாவிரதம் இருந்து உயிர்விட்டார், பல இடங்களில் ரயில் ஓடவில்லை., உடனடியாகவே பண்டித நேரு ஆந்திர ராஜ்ய அறிக்கையை வெளியிட்டார்கள். இதன் காரணமாக பண்டித நேரு அவர்களின் கௌரவம் எந்தவிதத்திலும் குறைந்துவிடவில்லை. அதன் காரணமாக தேர்தலிலோ அல்லது வேறு விதத்திலோ அவர்களுடைய செல்வாக்கு குறைந்துவிடவில்லை. அதேபோன்று தான் மகாராஷ்டிர ராஜ்யம் பிறந்திருக்கிறது. இவ்விதம் எந்த விதமான கிளர்ச்சிகளும் நடக்காமலேயே அமைச்சர்கள் மக்களுடைய கோரிக்கையை ஒப்புக்கொள்ள வேண்டும். 'மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல்' தான். அதை விட்டு விட்டு கிளர்ச்சி ஏற்பட்ட பின்னால்தான் ஒப்புக்கொள்வோம் என்று சொல்வது சரியல்ல. முன்னால் கிளர்ச்சி இருக்கிறது, ஆகவே இதை அனுமதிக்க முடியாது என்று சொன்னார்கள். இப்போதாவது இதை விவாதிக்க ஒப்புக்கொண்டதற்கு நன்றி செலுத்துகிறேன். இந்த விவாதத்தை வைத்துக்கொண்டாவது அமைச்சர் அவர்கள் சரியான வாக்குறுதியை, 'தமிழ்நாடு' என்று பெயர் வைப்பதை ஒப்புக் கொள்கிறோம் என்று அறிவித்தால் இந்நாட்டு மக்கள் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள். அதன் காரணமாக கனம் அமைச்சர் அவர்களுடைய கௌரவமும் உயரும் என்பதை தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI K. R. NALLASIVAM: மதிப்புக்குரிய சபாநாயகர் அவர்களே, இன்றைக்கு தமிழ்நாடு என்று பெயரிடுவதற்கான அறிவிப்பை நிச்சயமாக தமிழ்நாட்டுச் சர்க்காரிடமிருந்து மக்கள்

எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. இது சுயமரியாதையை விட்டுக் கொடுக்கும் பிரச்னை அல்ல. நம்முடைய நாட்டுக்கு தமிழ்நாடு என்று பெயர் வைப்பதால் இப்போது கௌரவமோ அல்லது அகௌரவமோ ஏற்பட்டுவிட முடியாது. தெரிந்தோ தெரியாமலோ இதுவரை அந்த பெயரிடாமல் இருந்து வந்திருக்கிறது. ஆகவே இன்றைக்காவது அந்த விதமான அறிவிப்புக் கிடைக்குமானால் தமிழ்நாட்டிலுள்ள மக்கள் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள். இதனால் கிடைக்கக்கூடியது அரசியல் லாபம்தான் என்று கருதினாலும் கூட இப்போது இந்த அறிவிப்பை வெளியிடுவதின் காரணமாக அந்த லாபத்தை சர்க்கார்தான் அடையும் என்று நினைக்கிறேன். இன்று இந்தப் போராட்டத்தை நடத்திக் கொண்டிருக்கும் அரசியல் கட்சியாக தமிழரசு கழகம்தான் மக்கள் முன்னால் நின்று கொண்டிருக்கிறது. அதைப் பொறுத்த வரையில் அந்தக் கட்சி தேர்தலில் ஈடுபடக் கூடியதல்ல. வெறும் கலாச்சாரக் கழகமாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. இன்று தோன்றியது மட்டுமல்ல, கடந்த 1956-ம் வருடத்திலும் 1960-லும் நடத்திய போராட்டத்தில் சுமார் 1,000 சோஷியலிஸ்ட் கட்சித் தொண்டர்கள் சிறைக்குப் போனோம். இந்தப் பெயர் போராட்டத்திற்காக நாங்கள் தான் சிறைக்குப் போனோம் என்று நான் இப்போது சொல்ல முன் வரவில்லை. உண்மையிலேயே இன்றைக்குத் தமிழ்மொழி சட்டபூர்வமான மொழி என்று அறிவிக்கப் பட்டபோது இந்த நாட்டின் பெயர் தமிழ்நாடு என்று அறிவித்திருந்தால் இந்த தொல்லைகள் எல்லாம் வரக்கூடிய சந்தர்ப்பம் வந்திருக்க முடியாது. அன்றைக்கு அதை செய்யாமல் போனது நமது துரதிருஷ்டம்தான் என்று சொல்லவேண்டும். இந்த நிலையில் 'தமிழ்நாடு' என்ற பெயர் எங்கேயிருந்தது என்றெல்லாம் கேட்கப்படுகிறது. கவிஞர்கள், புலவர்கள், அறிஞர்கள் இவர்களெல்லாம் தமிழ்நாடு என்பதற்குப் பல ஆதாரங்கள் இருக்கின்றன என்று நமது முன்னால் வைக்கிறார்கள். அவைகளை நாம் படிக்கின்றோம். தேசீயக் கவி பாரதி அவர்கள் 40 ஆண்டுகளுக்கு முன்பு இந்தப் பெயரைச் சொல்லும்போதே காதிலே தேன் பாய்வது போல் இருக்கிறது என்று—

"செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன்வந்துபாயுது காதினிலே"

என்று—பித்துப் பிடித்துப் பாடவில்லை—உணர்ச்சி வயப்பட்டுப் பாடியிருக்கிறார். உண்மையிலேயே அந்தப் பெயரைக் கேட்டவுடன் அத்தகைய உணர்ச்சி வருமானால், நிச்சயமாக தமிழ் நாட்டு மக்கள் எவ்வளவு ஆவலாக இருப்பார்கள் என்று நடைமுறையிலே கண்டு சொன்னார்கள். பாரதி மாத்திரமல்ல—இன்றைக்கு இருக்கக்கூடிய நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை அவர்களும், பாரதிதாசன் அவர்களும், இன்னும் கவிஞர்களாக இருக்கக் கூடியவர்கள் அத்தனை பேர்களும்—அவர்கள் எந்த இயக்கத்தையும் சேர்ந்தவர்களல்ல, பொதுவானவர்கள் என்பதில் சந்தேகம் கிடையாது—அவர்களெல்லோரும் தங்களுடைய கற்பனைக்

24th February 1961] [Sri K. R. Nallasivam]

கண்களில் கண்டு நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். எந்தத் துறையில் பார்த்தாலும் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் எந்த விதமான சங்கடமும், தொல்லையும் இருப்பதாக யாரும் சொல்ல முடியாது. ஆகவே தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் காலதாமதம் செய்யக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

அது மாத்திரமல்லாமல் ராஜ்யத்தில் இருக்கிற கட்சிப் பற்றற்றவர்களும், கட்சிகளைச் சேர்ந்தவர்களும், பொது மக்களும் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் கொஞ்சம் கூடத் தயக்கம் காட்டுபவர்களாக இல்லை. இன்றைக்கு இருக்கக்கூடிய பஞ்சாயத்து போர்டுகள், ஸ்தல ஸ்தாபனங்கள் இவைகளில் காங்கிரஸ்காரர்கள் இருக்கிறார்கள்—எதிர்க் கட்சிக்காரர்களும் இருக்கிறார்கள். அவர்களெல்லோரும் ஏக மனதாக ஒவ்வொரு தடவையும் தீர்மானம் நிறைவேற்றுகிறார்கள்.

நான் இன்னொன்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். வெள்ளைக்காரர்கள் நாட்டை ஆண்டபோது டாஞ்சூர், ட்ரிச்சி, ட்யூட்டிக்கோரின் என்று பெயர் வைத்திருந்தார்கள். அதை இன்றைய தினம் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தூத்துக்குடி என்று மாற்ற வேண்டிய அவசியம் என் வந்தது? தமிழ் மரபுக்கு ஏற்றவாறு இருக்கவேண்டுமென்று மாற்றியிருக்கிறார்கள். மெட்ராஸ் என்பதைத் தமிழ்நாடு என்று ஏன் மாற்றவேண்டுமென்றால், அந்தப் பெயர்களை ஏன் மாற்றினார்களோ அதே காரணத்திற்காகத்தான் மாற்றவேண்டும். இப்படி எந்தத் துறையில் பார்த்தாலும் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் கஷ்டம் கிடையாது. வேறு யாருக்காவது இதனால் லாபம் கிடைத்துவிடுமோ என்றால் அப்படி யாருக்கும் லாபம் கிடைத்துவிடப் போவதில்லை. மக்களுடைய ஆசையை நிறைவேற்றுவதிலே யாருக்கும் நஷ்டம் கிடையாது. இதனால் ஓட்டுக் கிடைக்குமா, அல்லது இதனால் ஓட்டுப் பிரிந்துவிடுமா என்றால் அப்படி ஒன்றும் ஏற்பட்டுவிடாது. ஒரு சில கட்சிகள் வேண்டுமானால் எங்களால்தான் வந்தது என்று சொல்லலாம். ஆனால் அதற்காக மக்கள் ஓட்டு போடுவார்கள் என்று நினைப்பது சரியல்ல. ஆக, இதையெல்லாம் நன்கு கவனத்தில் எடுத்துக்கொண்டு இன்றைக்கே தமிழ்நாடு என்று மாற்றுகிற அறிவிப்பை செய்தாலும் சரி, அல்லது திரு. சிவஞான கிராமணியார் அவர்கள் குறிப்பிட்டதுபோல நிர்வாகத் துறை சங்கடங்களை அனுசரித்து இவ்வளவு நாட்களில் பெயர் வைக்கப்படும் என்றாவது அறிவித்தால், அது தமிழகத்திற்குச் செய்யப்படும் சேவை என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI D. S. AUTHIMOOLAM: மிஸ்டர் ஸ்பீக்கர் ஸார், இந்தத் தமிழ்நாட்டு பெயர் பிரச்னை ஒரு வேடிக்கையாகத்தான் தமிழ்நாட்டு சட்ட சபையில் நடந்துகொண்டிருக்கிறது. . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, is it not derogatory to the proceedings of the House to say that.

[24th February 1961

MR. SPEAKER : அவர் என்ன சொன்னர். . . . . ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வேடிக்கையாக நடக்கிறது என்று சொன்னல் என்ன அர்த்தம்? It is ridiculing the proceeding of the House.

MR. SPEAKER : கனம் அமைச்சர் சொல்வது சரிதானே? வேடிக்கையாக இருக்கிறது என்று சொல்லக் கூடாது.

SRI D. S. AUTHIMOOLAM: With good intention and not bad faith.

THE HON. SRI C. SUBRAMANIAM : But the hon. Member has used the wrong word.

SRI D. S. AUTHIMOOLAM: பொதுவாகவே தமிழர் என்ற இனம் எப்போதுமே கொஞ்சம் ஏமாந்த . . . . . சோணகிரிகள் தான். (சிரிப்பு.) அந்தப் பிரதிபலிப்புத்தான் இந்த சென்னை ராஜ்ய சட்ட சபையிலும் இந்தப் பெயர் பிரச்னை சம்பந்தமாக உணர்ச்சி வேகம் ஏற்படவில்லை. ஏன்? சரித்திர சம்பந்தமாகவே எடுத்துப் பாருங்கள். தமிழ்நாட்டிலே உள்ள மதுரையம் பதியில் தெலுங்கு அரசர்கள் எப்படி பலசாலியாக இருந்தார்கள்? தமிழ் என்ற அபிமானம் குறைவாக இருந்தது. இதற்காகச் சண்டைக்கு வந்து விடாதீர்கள்—தோட்டத்திலே பாதி கிணறு என்ற மாதிரி இங்கே ரெட்டியார்கள், நாயுடுக்கள் நிறைய பேர்கள் இருக்கிறார்கள்—அவர்கள் எல்லோரும் தமிழர்கள் என்று நினைக்கிறேன். மகாராஷ்டிரத்திலிருந்து ஏதோ ஒரு அரசன் ராமேச்வரம் போனன்—சாமி கும்பிடப் போனன். சோழ ராஜ்ய ராஜாவைப்பற்றி சூரன், தீரன், வீரன் என்றெல்லாம் எழுதுவார்கள். சோழ ராஜா மாடியில் ராணி சகிதம் நின்று கொண்டிருந்தான். காசிக்குப் போய்விட்டு ராமேச்வரம் போகப் படை பட்டாளத்தோடு அந்த மகாராஷ்டிர ராஜா வந்து கொண்டிருந்தான். அதைப் பார்த்துவிட்டு ஒரு சேவகன் ராஜாவிடம் போய் யாரோ படையெடுத்து வந்துவிட்டான் என்று சொன்னன். உடனே ராஜாவும் ராணியும் அண்டர் க்ரவுண்டுக்குப் போய்விட்டார்கள். தமிழன் என்ற இன உணர்ச்சி அந்த ராஜாவுக்கு ஜாஸ்தி இல்லையென்று தெரிகிறது. ஆகவே தமிழன் என்ற இனம் எப்போதுமே தான் தமிழன் என்பதிலும், தமிழ் பாஷை என்பதிலும், தமிழ்நாடு என்ற அபிமானத்திலும் பொதுவாக பின் தங்கி ஆயிரக்கணக்கான வருஷங்கள் இருந்திருக்கிறார்கள். இன்றைக்கு பாஷையும் அப்படித்தான் சிதைந்திருக்கிறது. மெட்ராஸில் தமிழ் பாஷை பேசுவதில் தயிர் என்று சொல்வதற்கு "ஊஊ . . . ." என்று சொல்லுகிறார்கள். (பலத்த சிரிப்பு.)

அதே மாதிரிதான் தமிழிலே பேசுவதைப் பற்றியும். பம்பாய் வாசியோ அல்லது உத்தரப் பிரதேச வாசியோ பி.ஏ., எம்.ஏ. படித்திருந்தாலும் கூடுமான வரையில் தாய் பாஷையில்தான் பேசுவார்கள். இங்கே எப்படியென்றல் ஃபர்ஸ்ட் ஃபாரம்,

24th February 1961] [Sri D. S. Authimoolam]

செகண்ட் ஃபாரம் படித்திருந்தாலும் யாரையாவது ஸ்டேஷனில் சந்தித்துப் பேசுவதானாலும், சிநேகிதர்களோடு பேசுவதானாலும் அரைவாசி ஆங்கிலத்திலும், அரைவாசி தமிழிலும் பேசுகிறார்கள். ஆகவே இந்த மாதிரி தமிழனுக்கு பாஷாபிமானம் குறைவு. தமிழ் என்று சொல்வதிலும், தமிழ்நாடு என்று சொல்வதிலும் அபிமானம் குறைவு. இது ரொம்ப நாளாக இருக்கக்கூடிய விஷயமாக இருக்கிறது. ஆகவே இந்தப் பிரதிபலிப்புத்தான் இங்கே இருக்கிறது. ஈரோட்டு நாயக்கர் சொல்லுகிறார்கள் இது பச்சைத் தமிழன் மந்திரி சபை என்று. இது நூற்றுக்கு நூறு உண்மை. முன்னராவது தமிழ் நாயுடு இருந்திருப்பார் மந்திரி சபையில்—இல்லையென்றாலும் தமிழ் ரெட்டியார் இருப்பார். தமிழ் பாஷை பேசக்கூடிய கன்னடியர் சபாநாயகர் அவர்கள் மன்னிக்கவேண்டும்—இருந்திருப்பார். இப்போது பார்த்தால் நூற்றுக்கு நூறு—காமராஜ் நாடார் முதன் மந்திரியிலிருந்து வரிசையாகப் பாருங்கள்—தமிழ் பாஷை பேசக்கூடிய தமிழ் மந்திரிகள். இந்த மாதிரி சந்தர்ப்பம் ஏற்பட்டதே ஆந்திரா பிரிந்த பிறகு இந்தத் தடவைதான் ஏற்பட்டிருக்கிறது. நான் நாயுடுவுக்கோ, ரெட்டியாருக்கோ மந்திரி பதவி கொடுக்க வேண்டாம் என்று சொல்லவில்லை. எனக்கு அநேக ரெட்டியார்கள் சிநேகம். அநேக ராஜபாளையம் ராஜாக்கள் சிநேகம். எல்லாத் தெலுங்கர்களையும் நான் கலந்திருக்கிறேன். தமிழ்நாடு என்று சொல்வதில் அவர்களுக்குப் பச்சைத் தமிழர்களைவிட அதிக அபிமானம் இருந்துகொண்டிருக்கிறது. 500 வருஷங்களாக இங்கு இருந்துவிட்ட காரணத்தினால் அவர்களுக்கு இந்த அபிமானம் ஏற்பட்டிருக்கிறது. அந்த அபிமானம் ஏற்பட்ட பிறகு தமிழ் நாடு என்று பெயர் வைப்பதிலும் பிரீதி ஏற்பட்டிருக்கிறது. அவர்களுக்கே இந்த அபிமானம் ஏற்பட்டிருக்கும்போது, நூற்றுக்கு நூறு தமிழர்களாக உள்ள மந்திரிகள் என் பின்தங்க வேண்டும் என்று எனக்குப் புரியவில்லை. ஆனால், இந்த சும்மாக் கிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தார்கள் என்று சொல்வார்களே, அதுமாதிரி அடிப்படையில்தான் இப்போது சொல்லப்பட்டு வருகின்றது. 11,00 a.m.
அதாவது எதிர்க்கட்சியினர் சொல்லிக்கொண்டிருக்கிற காரணத்தினால் 'நீங்கள் சொல்லி நாங்கள் செய்ய முடியாது' என்ற அளவில்தான் காரணம் சொல்லப்பட்டு வருகிறது. அந்த காரணத்தைத் தவிர, வேறு எந்த காரணமும் இருக்க முடியாது. எப்படி வக்கீல்கள் கட்சிக்காரர்களுக்கு வக்காலத்து வாங்குவதற்காக ஒரு குறிக்கோளைக் கண்டுபிடித்து வக்காலத்து வாங்குகிறார்களோ, அந்த மாதிரிதான் ஏதாவது காரணங்கள் எடுத்துக் கூறப்படும். அதைத் தயார் செய்து வைத்திருப்பார்களென்றும் எனக்குத் தெரியும். (சிரிப்பு) அதையெல்லாம் நம் தமிழ்த் தாயிடம் வைத்துக்கொள்ள வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாபை எடுத்துக் கொள்ளுங்கள். பஞ்சாபைச் சேர்ந்தவன் பஞ்சாபி என்று சொல்லிக்கொள்ளுகிறான். பஞ்சாப் ராஜ்யம் என்று பெயர் வைத்துக்கொள்ளுகிறான். அதேபோல் ஒரிசா பகுதியைச் சேர்ந்தவர்கள் ஒரிசா ராஜ்யம் என்றும், பீகார் பகுதியைச் சேர்ந்தவர்கள் பீகார் ராஜ்யம்

[Sri D. S. Authimoolam] [24th February 1961

என்றும் பெயர் வைத்துக்கொள்கிறார்கள். ஆனால் மதராசுக்கு மட்டும் இன்று சென்னை ராஜ்யம் என்று சொல்கிறோம். மதராசைவிட உலகில் சிறந்த ஒரு பெரிய பட்டணமாகிய பம்பாயை எடுத்துக் கொள்ளுங்கள். அந்தப் பெயரை மாற்றி இப்போது மகாராஷ்டிரா ராஜ்யம் என்று பெயர் வைத்துவிட்டார்கள். அப்படி மாற்றிவிட்டதினால் குறை ஒன்றும் வந்துவிடவில்லை. அதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த உணர்ச்சி நமக்கு வேண்டாமா? ஆனால் நாம் இதற்குக் காரணம் காட்ட சரித்திரத்தையும், இலக்கியத்தையும் பேச ஆரம்பிக்கிறோம். அப்படிப் பேச வேண்டுமென்றால், அதற்காகத் தனி மேடை அமைத்துப் பேசினால் நல்லது. அப்போது ஸ்ரீ சின்னதுரை அவர்களும், கோவை கம்பர் ஸ்ரீ கருத்திருமன் அவர்களும், வட ஆற்காடு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அவர்களும் இதற்குச் சரித்திரத்தில் ஆதாரங்கள் காட்டி விடுவார்கள். அந்த மாதிரியான உணர்ச்சி நமக்கு வேண்டாமா? நாம் பாரதியாரின் பெயரைச் சொல்லி வாழ்கிறோம். "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று சொல்கிறோம். அந்த செந்தமிழ் நாடு எங்கே? நாம் டெல்லிக்குப் போனால் அல்லது அதற்கு அப்பாலும் இமாலயத்திற்குச் சென்றால், உங்களுக்கு எந்த பிரதேசம் என்று கேட்டால், அதற்கு நாம் "I belong Tamilnad" என்று ஆங்கிலத்திலாவது தமிழ்நாடு என்று சொல்ல வேண்டாமா? (சிரிப்பு). அப்போது அவர்களுக்குத் தமிழ்நாடு என்று ஒரு நாடு இருக்கிறதா என்று கேட்டால், தமிழ்நாடு என்று ஒன்று இருக்கிறது என்று கூறியாவது சந்தோஷப் படலாம் அல்லவா? அதற்குக் கேரளா அப்படியே இருக்கிறதே, மைசூர் அப்படியே இருக்கிறதே என்று சொல்லிவிடுவார்கள். தயவுசெய்து அப்படிச் சொல்லவேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். கொஞ்சம் பெரிய மனது வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். தமிழ்நாடு என்று பெயர் வைப்பதை ஒப்புக் கொள்வது தமிழ்நாட்டுக்குச் செய்யக்கூடிய ஒரு பெரிய காரியமாகும்.

நாம் இன்றைக்கு எத்தனையோ விழாக்களைக் கொண்டாடுகிறோம். வனவிலங்கு விழா என்று கொண்டாடுகிறோம், கைத்தறி வார விழா என்று கொண்டாடுகிறோம். இப்படி எத்தனையோ விழாக்கள் கொண்டாடும்போது, நாம் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்கும் ஒரு நாள் குறிப்பிட்டு, இப்பெயரை ஒப்புக் கொண்டு, தமிழ்நாடு பூராவும் கோலாகலமாக பால், பாயசம் முதலியன பொங்கி, ஒரு தமிழ் மாதப் பிறப்பன்று அல்லது தை மாதம் 1-ம் தேதி என்று ஒருநாள் குறிப்பிட்டு, அப்படி வருகின்ற தினத்தை மிகவும் கோலாகலமாகக் கொண்டாட ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் மிகவும் தாழ்மையுடன் அரசாங்க அமைச்சர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்வதின் மூலம் நீங்கள் எதிர்கட்சியினருக்குப் பயந்தோ அல்லது அவர்கள் சொல்லியோ செய்து விட்டதாக நினைக்கக் கூடாது. எதிர்க் கட்சியினர் யாரும் இதுபற்றி மேடையில் பேசக்கூடாதென்று சொல்லுங்கள்,

24th February 1961] [Sri D. S. Authimoolam]

தாங்கள் இதைப்பற்றி மேடையில் ஒன்றும் பேசாமல் இருக்கிறோம். அப்படிப் பேசி நாங்கள் வோட்டுக் கேட்டாலும் வோட்டுக் கிடைக்குமா என்பது சந்தேகமாகத்தான் இருக்கிறது. (சிரிப்பு) ஆகவே ஏதாவது சாக்குச் சொல்வது சரியல்ல. சற்று பெரிய மனது வைத்துச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே எனக்கு இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்காக எல்லோருக்கும் என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**MR. SPEAKER :** நான் கனம் அங்கத்தினர்களுக்கு ஒரு தனிப்பட்ட வேண்டுகோள் சொல்ல விரும்புகிறேன். இந்தச் சபையில் விவாதம் நடக்கும்போது கனம் அங்கத்தினர்கள் ஒரு மந்திரியைப் பற்றிப் பேசலாம். சபையில் இல்லாதவர்களைப்பற்றிப் பேசக்கூடாது. அதுபோல் சபாநாயகரையும் விவாதத்தில் இழுத்துப் பேசக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதிமூலம் அவர்கள் பேசும்போது சபாநாயகரை இழுத்தார். அப்படிப் பேசுவது தவறு. இந்த முறை எச்சரிக்கிறேன். இன்னொரு முறை இப்படிப் பேசினால் என்னுடைய அதிகாரத்தை உபயோகப்படுத்த வேண்டிவரும். இந்த முறை எச்சரிக்கிறேன் என்பதை மீண்டும் சொல்லிக்கொண்டு, தயவுசெய்து அங்கத்தினர்கள் சபாநாயகரை விவாதத்தில் இழுத்துப் பேசக்கூடாதென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ சின்னதுரை அவர்களுடைய தீர்மானத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இன்றைய தினம் சென்னை ராஜ்யம் என்கிற பெயரை மாற்றி, தமிழ்நாடு என்கிற பெயர் வைக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் நமது தமிழ்நாட்டிலே இருக்கக்கூடிய இந்தச் சட்டசபையிலே விவாதத்திற்கு வந்திருப்பதே நமது துரதிருஷ்டவசமானதாகும். வருத்தப்படக்கூடிய விஷயமாகும். இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, பாஷை அடிப்படையிலே ஒவ்வொரு மாகாணத்தின் பெயரையும் மாற்றி அமைக்க வேண்டுமென்று ஒவ்வொருவரும் கேட்டது நமக்குத் தெரியும். அப்படிக்கேட்ட நேரத்திலே, பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு முதல்கொண்டு பலர் இது காட்டுமிராண்டித்தனமான போக்கு, பைத்தியக்காரத்தனமான போக்கு என்று கூறினார்கள். அப்படிக் கூறப்பட்ட நேரத்திலே, இந்தியாவிலே முதன்முதலாக பாஷையின் அடிப்படையிலே மாகாணத்தினுடைய பெயரை மாற்றி அமைக்க வேண்டுமென்று ஆந்திராதான் முன்வந்தது. அதனால் கோடிக்கணக்கான பணம் வீண் விரயமானதும் நமக்குத் தெரியும். அப்படி ஒரு பெரிய கிளர்ச்சி இந்தியாவிலே முதன்முதலில் ஏற்பட்ட பிறகே, பெயர் மாற்றக்கூடிய நிலைமை ஏற்பட்டது. அந்த அடிப்படையில்தான் மற்ற ராஜ்யங்களின் பெயரும் மாற்றக்கூடிய நிலைமை ஏற்பட்டது. ஆகவே அதுபோன்ற ஒரு நிலைமை ஏற்பட்ட பிறகுதான், நாங்கள்

[Sri V. K. Kothandaraman] [24th February 1961

தமிழ் நாடு என்கிற பெயரைக் கொண்டு வரமுடியுமென்கிற ஒரு நம்பிக்கையைத்தான் இன்றைக்கு இருக்கக்கூடிய அமைச்சர்கள் உண்டாக்கி இருக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறோம்.

இந்தத் தமிழ்நாடு என்ற பெயரை பாரதியார் எழுதி வைத்தார் என்று கூறுகிறார்கள். அப்படி எங்கள் பாரதியார் எழுதி வைத்த பிறகுதான், நாங்கள்கூட தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு பெயர் மாற்றினோம் என்று சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்வதால் அந்த பாரதியார் எந்த அடிப்படையில் மாற்றினார் என்பதை நாம் ஆராய்ச்சி செய்யக்கூடிய நிலைமையில்தான் இருக்கிறோம். அவர்கூட பல இலக்கிய ஆராய்ச்சி நூல்களை ஆராய்ந்த பின்னர்

(Deputy Speaker in the Chair.)

தான் தமிழ்நாடு என்று எழுதியிருப்பர் என்று சிந்திக்க வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். ஆகவே பாரதியார் எழுதினார், அதனாலே அதை மாற்றினோம் என்று சொல்வதெல்லாம் உண்மையில் நாம் ஆராயவேண்டிய பிரச்னையல்ல. பல இனத்தை சேர்ந்தவர்கள், பல பாஷையைப் பேசக்கூடியவர்கள் இருக்கிறார்கள் என்ற காரணத்தினால் இப்படிச் செய்கிறோம் என்று சொல்வதும் சரியல்ல. ஒரே பாஷையைப் பேசக்கூடியவர்கள் ஒரு கமிட்டியில் இருக்கவேண்டுமென்கிற அடிப்படையிலே இன்றைய தினம் அமைக்கப்படுகிறது என்பது நமக்குத் தெரிந்த விஷயம். ஆகவே பாரதியார் எழுதினார், மாற்றினோம் என்று சொன்னால், ஆந்திர மாகாணத்திற்கு ஆந்திர ராஜ்யம் என்று இன்றைக்கு மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறதே ? அதேபோல் வங்காளத்திற்கு மாற்றியமைக்கப்பட்டிருக்கிறதே ? இப்படி ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் பெயர் மாற்றப்பட்டிருக்கிறதே, அதற்கெல்லாம் ஒருவர் எழுதி இருக்கவேண்டுமென்றுதான் சொல்லவேண்டும்; சொல்ல முடியும். ஆகவேதான் இதற்கு முன்னால், ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்னாலேயே இந்தத் தமிழ்நாடு என்கிற பெயர் திட்டவட்டமாக வழக்கத்திலே வந்திருக்கிறது என்பதைப் பார்க்க முடிகிறது.

அது மாத்திரமல்ல. நாம் இன்றைய தினம் பாடக்கூடிய தேசியக் கீதத்திலே அதாவது "ஜனகனமன அதிநாயக ஜெயஹே" என்ற பாட்டிலே தமிழ் நாடு என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை. அதற்குப் பதில் "திராவிட உத்கல வங்கா" என்றுதான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்படி அதில் திராவிட நாடு என்று குறிப்பிடப்பட்டிருப்பதால், அப்பெயரை வைப்பதற்கு விரும்புகிறார்களா என்றால், அதற்கும் இவர்கள் விரும்பவில்லை. ஆனால் பாரதியார் குறிப்பிட்டிருக்கிற தமிழ்நாடு என்கிற பெயரை மட்டும் தங்கள் காங்கிரஸ் கமிட்டிக்கு வைத்துக்கொண்டிருக்கக் கூடிய நிலைமையில் இருக்கும்போது, சென்னைக்கு மட்டும் தமிழ்நாடு என்கிற பெயரை வைத்துக்கொள்வதில் ஏன் வெட்கப்பட வேண்டும் ? இது வேடிக்கையான நிலைமை அல்லவா ? எதிர்க் கட்சியினர் சொல்லி, அதற்காக அவர்கள் ஒரு கிளர்ச்சியை நடத்தி, அதை நாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு நிலைமை

24th February 1961] [Sri V. K. Kothandaraman]

ஏற்பட்டுவிட்டால், அந்தச் செல்வாக்கு எதிர்க் கட்சியினருக்குப் போய்விடுமே, நமக்கு இல்லாமல் போய்விடுமே, அதுவும் தேர்தல் நெருங்கக்கூடிய இந்த நேரத்திலே இதுபோன்று ஒப்புக்கொள்ளக் கூடிய ஒரு நிலைமை ஏற்படுமானால், என்ன ஆகுமோ என்று நினைக்கக்கூடிய நிலைமைதான் இதற்கு முக்கிய காரணம். அப்படி ஒப்புக்கொள்வதால், எதிர்க் கட்சிக்கு மட்டும் செல்வாக்குப் போய் விடுமென்று நினைப்பது தவறு. ஆளும் கட்சிக்கும் செல்வாக்கு ஏற்படும் என்பதை நான் இச்சமயம் கனம் அமைச்சர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதிலும், நாம் சுதந்திரம் அடைந்த பிறகு, படிப்படியாக கீழே இருக்கக்கூடிய பஞ்சாயத்து, நகரசபை போன்ற ஸ்தல ஸ்தாபனங்கள் முதல், சட்டசபை வரையிலும் இன்றைக்குத் தமிழிலேயேதான் ஒவ்வொரு நடவடிக் கைகளும் இருக்கவேண்டுமென்று நினைத்து அதற்கான தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டு வருகிறோம். ஆட்சி முதல், போதனு மொழி வரையிலும் இன்றைக்குத் தமிழிலேயேதான் கொண்டுவர வேண்டுமென்று, அதற்காக நாம் படிப்படியாக நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டு வருகிறோம். அவ்வாறு செய்துக்கொண்டு வருகின்ற நேரத்திலே, இப்படி இப்போது பெயரை மாற்றி வைக்கவில்லை என்று சொன்னுல், அப்படி மாற்றி வைக்கவில்லையானுல் குடியொன்றும் முழுகிப்போகாது என்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்படுமானுல், அது அவ்வளவு நல்ல தல்ல. இப்போது ரோடுகளுக்கு, வீதிகளுக்குப் பெயரை மாற்றி வைக்கிறோம். அதேபோல் கட்டிடங்களுக்குப் பெயரை மாற்றி வைக்கிறோம். சிறிய கிராமங்களுக்குப் பெயரை மாற்றுகிறோம். அரண்மனை பாலஸுக்குத் தமிழகம் என்று பெயரை மாற்றுகிறோம். இதையெல்லாம் மாற்றவில்லை என்று சொன்னுல் என்ன முழுகிப் போய்விடும். ஆகவே தான் சொல்லுகிறோம், இப்படிப் பெயர் மாற்றத்தின் காரணமாகத் தான் தமிழ் உணர்ச்சி ஏற்பட முடியும். அந்தத் தமிழ் பற்று ஏற்படக்கூடிய அளவிற்கு இன்றைக்கு நாம் நிலைமையை உண்டாக்கவேண்டும் என்கின்ற காரணத்தினுல் தமிழர்கள் வாழக் கூடிய நமது ராஜ்யத்திற்குத் தமிழ் நாடு என்பதாகப் பெயரை மாற்றி அமைக்கவேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். இதற்காக வேண்டி ஒரு சில நண்பர்கள் இப்படிப் பெயரை மாற்றவேண்டுமானுல் கோடிக்கணக்கான ரூபாய் செலவாகும் என்ற ஒரு தவறுன எண்ணத்தை மக்கள் மத்தியிலே உண்டாக்கக்கூடிய அளவிற்குப் பேசுகிறுர்கள். இம்மாதிரி தவருகச் சொல்லி தவறுன எண்ணத்தை உண்டாக்குவது சரியல்ல என்பதையும் இந்த நேரத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். மற்ற ராஜ்யங்களில் பெயரை மாற்றியிருக்கிறுர்களே, அதற்கு எத்தனை கோடி ரூபாய் செலவாயிற்று? இதற்காக வேண்டி உண்மையிலேயே பணம் செலவாகக்கூடிய அளவுக்கு நிலைமை கிடையாது என்பதை இந்த நேரத்திலே குறிப்பிட ஆசைப்படு கிறேன். குறிப்பாக எதிர்க்கட்சியினர்கள் கிளர்ச்சியில் ஈடு பட்டதற்குப் பிறகு ஒப்புக்கொண்டால் அதனுல் செல்வாக்கு

எதிர்க்கட்சியினருக்குப் போய்விடுமோ என்கின்ற எண்ணத்திற்கு அவசியமே இல்லை. இன்றைக்கு நான் கேள்விப்படுகிறேன். தமிழ்நாடு என்ற பெயரை வைக்கவேண்டும் என்பதற்காக வேண்டி நமது மதிப்பிற்குரிய தியாகி சங்கரலிங்க நாடார் உண்ணுவிரதம் இருந்து மாண்டு மடிந்த அன்றையதினம் அவர் உயிரைக் காப்பாற்றுவதற்கு முதன் மந்திரி அவர்கள் அந்தக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளாமல் இப்பொழுது ஏற்றுக்கொண்டார்கள் என்கிற அளவிற்கு நாடார்கள் மத்தியிலே எதிர்ப்பு வரும் என்ற காரணத்தினுல் இது போன்ற பிடிவாதம் இருக்கிறது என்பதாகக் கேள்விப்படுகிறேன். அப்படி ஒன்றும் எதிர்ப்பு வராது. அன்றைக்கு இருந்த நிலைமையில் அப்பொழுது அந்தக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமையாக இருந்திருக்கலாம். இன்றைக்கு வேறு நிலைமையாக இருக்கலாம். ஆகவே, அப்படி எதிர்ப்பு வருமே என்ற ஒரு மனேபாவத்தோடு அதை ஏற்றுக் கொள்ளுவதற்குத் தயக்கம் இருக்குமாஞல், அது தவருன தயக்கம், தவருன எண்ணம் என்பதையும் இந்த நேரத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். சென்னை ராஜ்யம் என்ற பெயரை மாற்றி தமிழ் நாடு என்ற பெயரை வைக்கவேண்டும் என்கின்ற அளவிற்குக் கட்சி பாகுபாடு இல்லாமல் எல்லா மக்களும் தமிழ் நாடு என்று பெயர் இருக்கவேண்டும் என்று விரும்பக்கூடிய இந்த நேரத்தில் சர்க்கார் இதை அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும், தமிழ் நாடு என்ற பெயரைத் தேர்தலுக்கு முன்னுல் கண்டிப்பாகக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அந்தக் கோரிக்கையை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கையோடு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri P. U. SHANMUGHAM :** சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, நண்பர் திரு. சின்னதுரை அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த ராஜ்யத்தின் பெயர் மாற்றத் தீர்மானத்தை மனமார வரவேற்கிறேன். அப்படி வரவேற்றுப் பேசுகின்ற நேரத்தில் நான் ஒன்றை நிதி அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இதே அவையில் நான் 2, 3 ஆண்டுகளுக்கு முன்பு பேசும்பொழுது இந் நாட்டிற்குத் தமிழ்நாடு என்ற பெயரை வைக்கவேண்டும் என்று சொல்லி, பாரதியார் அவர்களின் பாடலைச் சொல்லி

நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரி எல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு

என்று சொல்லி பாரதி அவர்கள் ஒத்துக்கொண்டிருக்கிற தமிழ் நாடு என்ற பெயரை இந்த நாட்டிற்கு இடவேண்டும் என்று அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொண்டேன். அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்பொழுது "இரண்டு ஆண்டுகள் பேசாமல் இருந்தால் நான் அதைப்பற்றி யோசிக்கிறேன்" என்று சொன்

24th February 1961] [Sri P. U. Shanmugam]

னார்கள். இரண்டு ஆண்டுகள் பூர்த்தி ஆகும் வரையில் அப்படியே பேசாமல் இருந்தபோதிலும், நாட்டிற்குப் பெயரை வைக்கிற நல்ல மனமும் குணமும் . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இரண்டு ஆண்டு இன்னும் முடியவில்லையே ? . . .

SRI P. U. SHANMUGHAM : முடிந்துவிட்டது என்று கருது கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் கணக்குப் பார்த் தேன். இன்னும் முடியவில்லை. (சிரிப்பு.)

SRI P. U. SHANMUGHAM : நாட்டிற்குப் பெயர் வைக்கின்ற நல்ல மனமும் நல்ல குணமும் பெற்றிருக்கிற கனம் நிதி அமைச்சர் அவர்கள் நாட்டிற்குப் பெயர் வைப்பார்கள் என்று நாங்களெல்லாம் உள்ளபடியே எதிர்பார்த்தோம். கட்சி வேறுபாட்டிற்கு அப்பால் நின்று சொல்லுகிறேன். இந்த அமைச்சர் அவையிடமிருந்து தமிழ் நாட்டு மக்களுக்கு நல்ல நீதி கிடைக்கும், நியாயம் கிடைக் கும் என்ற நம்பிக்கையோடு இருப்பவர்களில் நானும் ஒருவன் என்று கூறி இதை நான் எதிர்பார்த்தேன். ஆனால் நாட்டிற்குப் பெயர் வைக்கிற அளவிற்கு அவ்வளவு பரந்த மனம் இல்லாது, நீலகிரியில் ஒரு வீட்டிற்குப் பெயர் வைத்தார்கள். உள்ளபடியே வருத்தப்படுகிறேன். நாட்டிற்குப் பெயர் வைக்கும் அளவிற்கு அமைச்சர் அவைக்கு நல்ல மனம் இருக்கும் என்று எதிர்பார்த் தோம். 'வீட்டிற்கு' பெயர் வைத்தாய்விட்டது, போதாதா' என்று சொன்னார்கள். இல்லை, போதாது' என்று சொன்னால், " நாட்டிற் குப் பெயர் வைப்பது பற்றி பின்னால் யோசிக்கிறேன், இப்பொழுது இது ஒரு முக்கியமான பிரச்னை அல்ல" என்று தள்ளிப்போட்டார் கள். முக்கியமான பிரச்னை இல்லை என்றால், சர்வசாதாரண பிரச்னையாக இருந்தால் எதற்காக இதைத் தள்ளி போடவேண்டும் என்று கேட்கிறேன், தங்கள் மூலமாக அமைச்சர் அவையை. இதற்குப் பணம் தேவைப்படுமா என்று நண்பர் கோதண்டராமன் அவர்கள் பேசும்பொழுது கேட்டார்கள். தேவைப்படாது என்றும் சொன்னார்கள். பணம் தேவையில்லை, மனம்தான் தேவை. அந்த மனம் இந்த அமைச்சர் அவையில் இல்லா விட்டால் வேறு எந்த அமைச்சர் அவையில் நாம் எதிர்பார்க்கப் போகிறோம் என்று தமிழ் நாட்டு மக்கள் திகைப்பு அடைந் திருக்கிற நேரத்தில் தமிழ் நாட்டு மக்கள் இந்த அமைச்சர் அவை இந்த நாட்டிற்குப் பெயர் மாற்றம் செய்வார்கள் என்ற நம்பிக்கை யோடு இருந்திருக்கிற காரணத்தினால் எல்லோரும் மறைமுக மாகவும் நேர்முகமாகவும் இந்த அமைச்சர் அவையை வற்புறுத்திக் கொண்டு வருகிறார்கள். யாரோ எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார்கள், ஆகவே இந்தத் தீர்மானத்தை ஒத்துக் கொள்ளமாட்டேன் என்று தள்ளுகிற அளவிற்கு ஜனநாயகப் பண்பு குறைந்தது இந்த அமைச்சர் அவை என்று நான் கருத வில்லை.

[Sri P. U. Shanmugam] [24th February 1961

தமிழ் நாட்டில் ஒரு கதை சொல்லுவார்கள். யாரோ ஒரு பிச்சைக்காரர் ஒரு வீட்டில் வந்து பிச்சை கேட்டாராம். அப்பொழுது மருமகள் சொன்னுளாம், 'பிச்சை இல்லை, போ' என்று. அப்பொழுது உள்ளே இருந்த மாமியார் வெளியே வந்து சொன்னுளாம் 'மருமகளுக்கு அப்படிச் சொல்லுவதற்கு என்ன அதிகாரம் இருக்கிறது? நான் சொல்லுகிறேன், பிச்சை இல்லை போ' என்று. அந்த அளவிற்கு அமைச்சர் அவர்கள் கொடுமை யாகச் சொன்னுலும், 'நீங்கள் என்ன பெயர் வைப்பது, நான் பெயர் வைக்கிறேன்' என்று சொன்னுல் கூட சரி. ஆனுல் அந்தக் கொடுமைக்கார மாமியாரின் குணம் கூட அமைச்சர் அவைக்கு இல்லாமல் போய்விட்டதே என்று நாட்டு மக்கள் உள்ளபடியே . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அந்த மாமியாரின் குணம் எங்களுக்கு வரவேண்டும் என்று அவர்கள் விரும்புவார்கள் என்று நான் நினைக்கவில்லை.

**SRI P. U. SHANMUGHAM:** அந்த குணத்திற்குக் கூட வழி இல்லாமல் போய்விட்டது என்று தமிழ் நாட்டு மக்கள் ஐயுற வேண்டியதாக இருக்கிறதே என்று நான் உள்ளபடியே வருத்தப் படுகிறேன். நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர் வைப்பதால் என்ன கேடு வந்துவிடும் என்று புரியவில்லை. சிலர் போராட்டம் நடத்துகிருர்கள். எதிர்கட்சிக்காரர்கள் வற்புறுத்துகிருர்கள் என்ற காரணத்திஞல்தான், தமிழ் நாட்டு மக்களுக்கு இந்த அநீதி இழைக்கப்படும் என்று சொன்னுல் தமிழ் நாட்டு மக்களுக்கு இதை விட ஒரு கொடுமை வேறு எதுவும் இருக்க இயலாது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அமைச் சர் அவை நாட்டுப் பெயரை மாற்றியே தீரவேண்டும். மாற்றவே முடியாது என்று அரசாங்கம் சொல்லுமானுல் தமிழ் நாட்டு மக்களைப் பார்த்து அரசாங்கம் விடுத்த சவால் ஆகும் அது. தன் மானத்தை குத்திக் கெடுப்பதாகும். தமிழ் நாட்டு மக்கள் தமிழ் நாடு என்று பெயர் வைப்பதிஞல் என்ன சங்கடம் என்று அரசாங் கத்தைக் கேட்டால், தக்க பதில் இதுவரையில் சொன்னது கிடை யாது. இது அவசரப் பிரச்னை இல்லை, சோறு போட்டுக் கொண் டிருக்கக்கூடிய நேரத்தில் நாட்டுப் பெயரை மாற்றவேண்டும் என்று சொன்னுல், அது அவ்வளவு முக்கியமான பிரச்னை அல்ல என்றும், திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு எப்பொழுதும் பெயர் மாற்றம் செய்வதில் தான் போராட்டம் என்று கேலியும் இப்படியெல்லாம் சொல்லி வருகிருர்களே தவிர, இந்தக் கோரிக்கை மிகவும் நியாயமான கோரிக்கை என்று அமைச்சர் அவை ஒத்துக் கொள்ள எதற்காகத் தயங்கவேண்டும் என்று புரிய வில்லை.

சில நாட்களுக்கு முன்பு மத்திய பாராளு மன்றத்தில் மத்திய அரசாங்க மந்திரி—சட்ட மந்திரி என்று நினைக்கிறேன்—பேசுகிற பொழுது அவர் கூறியதைப் பத்திரிகையில் படித்தேன். தமிழ் நாட்டிற்குப் பெயர் வைக்கின்ற பிரச்னை, நாட்டுப் பிரிவினையை ஆதரிக்காமல் அந்தப் பிரச்னை வருமானுல், தமிழ் நாடு என்று

24th February 1961] [Sri P. U. Shanmugam]

பெயர் வைப்பதிலே ஆட்சேபணை இல்லை என்று கூறியிருக்கிறார். இந்தத் தீர்மானம் கொண்டுவந்தவர் நாட்டுப் பிரிவினை வேண்டும் என்று சொல்லுபவர் அல்ல. நாட்டைப் பிரிக்கவேண்டும் என்ற கொள்கை உடைய திராவிட முன்னேற்றக் கழகத்தினரைச் சார்ந்த வர் அல்ல. நாடு ஒன்றாக இருக்கவேண்டும் என்ற மனப்பான்மை கொண்ட திரு. சின்னதுரை அவர்களால் இந்தத் தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்தத் தீர்மானத்திற்குப் பின்னாலே ஒரு கற்பனை கற்பித்து வேறு ஏதோ சக்தி இதில் இருக் கிறது என்று சொல்லுவதில் நியாயம் கிடையாது. தமிழ் நாட்டு மக்களுடைய மனதைப் புண்படுத்தும் வகையில் இந்தத் தீர்மானம் அமையவில்லை. எல்லோரும் ஏகமனதாக ஒத்துக்கொள்ளக் கூடிய தீர்மானம் தான் இது. கனம் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் இதை நிச்சயம் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்று நம்பிக் கையோடு சொல்லுகிறேன். தமிழ்நாடு என்ற பெயரை வைக்கவேண்டும் என்று உள்ளபடியே நான் விரும்புகிறேன். தமிழ் நாட்டில் தமிழ் நாட்டு மக்களுக்காக தமிழர்களால் நடத்தப் படும் தமிழர் ஆட்சி அவையிலே இந்த நியாயம் இல்லாவிட்டால் வேறு எந்த ஆட்சி அவையிலும் இந்த நியாயம் வழங்கப்படாது. நாட்டு மக்கள் தங்களுடைய தீர்ப்பைச் சொல்லுவதற்கு முன்பாக, அமைச்சர் அவை இதை எதிர்க்கட்சி கொண்டு வந்த தீர்மானம் என்று சொல்லாமல், ஜனநாயகக் கடைசி மூச்சையாவது காப்பாற்றவேண்டும், ஜனநாயகம் முன்னேறவேண்டும், எதிர்க் கட்சித் தீர்மானமாக இருந்தாலும் அதைப் பெருந்தன்மையோடு ஏற்று நாட்டின் பெயரை மாற்றவேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வாழ்க தமிழகம்.

* Sri T. L. SASIVARNA THEVAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் சின்னதுரை அவர்கள் கொண்டு வந்த தீர்மானத்தை மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த நாங்களெல்லாம் பேசுகிறபொழுது ஆளும் கட்சி நண்பர் கள் ஒருவரும் பேசக்கூடாது என்று ஒரு வேளை '144' போடப் பட்டிருக்கிறதோ என்னவோ தெரியவில்லை, எனக்கு அம்மாதிரி ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. கனம் சபைத்தலைவர் அவர்கள் எல்லோரும் பேசுவதற்கு அனுமதித்தால் எங்களுடைய வேண்டு கோளை எல்லோரும் ஆதரிப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர்கள் பேசுவதற்கு முன் வந்தால்தானே சபைத்தலைவர் கூப்பிடலாம். யாரும் பேச முன்வரவில்லை என்றால் நான் என்ன செய்ய முடியும்?

Sri T. L. SASIVARNA THEVAR : பேசுவதற்கு அனுமதி கொடுத்தால் தானே பேசுவதற்கு முன்வருவார்கள். அனுமதி கொடுக்காமல் எப்படி முன்வருவார்கள்? தமிழ்த் தாய்க்கு நாம் ஒரு சிறந்த மரியாதை செய்யவேண்டுமென்று நினைக்கும்பொழுது, நமது மாநிலத்திலே தமிழ் மொழி சிறந்த முறையில் வளரவேண்டு மென்று நினைக்கக்கூடிய கல்வி அமைச்சர் காலத்திலேயே, இந்தப் பெயர் மாற்றத்திற்கு இவ்வளவு ஆட்சேபணை இருப்பது வருத்த

[Sri T. L. Sasivarna Thevar] [24th February 1961

மாக இருக்கிறது. அமைச்சரவை கொடுத்த எதிர்ப்புகளுக்கெல்லாம் எனக்கு முன்னால் பேசிய அங்கத்தினர்கள் நல்ல முறையில் பதில் சொல்லிவிட்டார்கள். அவைகளை நான் திரும்பச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. சமீபத்திலே இங்கே வந்த ராணியாருக்குக்கூட திருக்குறளைப் பரிசாகக் கொடுத்திருக்கிறார்கள். திருக்குறள் எந்த நாட்டைச் சேர்ந்தது? அது மெட்ராஸ் நாட்டைச் சேர்ந்தது என்று சொன்னால், அதைவிடக் கேவலம் வேறு இருக்க முடியுமா? திருக்குறள் பிறந்தது தமிழ் நாட்டிலே என்றுதான் சொல்ல முடியுமே தவிர, மெட்ராஸில் பிறந்தது என்று சொல்வது நலமாயிருக்குமா என்று கேட்கிறேன். இது ஒரு முக்கியமான பிரச்னை. இதற்குப் பிறகு அமைச்சர் அவர்கள் என்ன அறிக்கை விடப்போகிறாரோ, மறைமுகமாக வைக்கப்பட்டிருக்கிறது. ஒன்றும் தெரியவில்லை. ஒருகால் இதை ஒத்துக்கொண்டு, கடைசியாக, எதிர்பாராத விதமாக, திடீரென்று சொன்னால், எல்லோரும் சந்தோஷப்படட்டும் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறாரோ என்னவோ, தெரியவில்லை. அப்படியிருந்தால் அது வரவேற்கத்தகுந்த விஷயம்.

'இந்த விஷயத்தை இரண்டு வருஷம் ஒத்திப்போடவேண்டுமென்று சொன்னேனே, அதற்கு முன்னதாகவே ஆரம்பித்து விட்டார்களே' என்று அமைச்சர் சொன்னார்கள். அதைப் பற்றி கோபப்படவேண்டிய அவசியமில்லை. ஓரிரண்டு மாதம் முன் பின்னாக இருக்கலாம். இந்த விஷயத்தில் முடிவு காண ஒரு சர்வ கட்சி மகாநாடு கூட்டி அமைச்சர் தலைமை வகித்து, எந்த முறையில் எந்தச் சந்தர்ப்பத்தில் செய்யலாம் என்று கலந்து ஆலோசித்துச் செய்வதாயிருந்தால் அதை நாங்கள் வரவேற்கிறோம். கடைசி முடிவாக, எந்த வகையிலாவது, தங்களுடைய ஆட்சி காலத்திலேயே தமிழ் நாடு என்று பெயர் வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri K. ANBAZHAGAN**: சட்டமன்றத் துணைத்தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தின் மீது இந்தத் தமிழ்நாட்டுச் சட்டமன்றத்திலேயே நான் பேச நேரிட்டதற்கு நான் உண்மையாகவே வெட்கப்படுகிறேன். இதற்காக வாதிட நேர்ந்ததற்கு என்னுடைய ஆழ்ந்த வருத்தத்தை அமைச்சருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழ்நாடு என்று பெயர் வைக்கவேண்டுமென்றும் ஒரு தீர்மானத்தைத் தமிழ்நாட்டுச் சட்டமன்றத்திலே யுள்ள ஒரு எதிர்க்கட்சித் தலைவர் கொண்டுவருவதும், அந்தத் தீர்மானத்தின்மீது பல தலைவர்களும் உறுப்பினர்களும் ஆதரித்துப் பேசுவதும், அப்படிப் பேசியதற்குப் பின்னர் முடிவு என்னவாக இருக்குமென்றுகூட அறிய முடியாத நிலையிலே இன்றைய ஆட்சியாளர் நடந்துகொள்வதும், உண்மையிலேயே எதிர்காலத்தில் இந்த ஆட்சியாளர்கள் இந்த ஆட்சிப்பீடத்தில் இருப்பார்களா என்ற சந்தேகத்தை எனக்கு உண்டாக்குகிறது. இதை அமைச்சர் அவர்களும் எண்ணிப்பார்க்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். இதிலே பதிலளிக்கக் கூடியவராக இருக்கும் நமது

24th February 1961] [Sri K. Anbazhagan]

பொறுப்பு மிக்க நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் என்ன காரணத்தினுலோ இப்பொழுது இங்கே இல்லை. அதைப் பற்றி நான் வருத்தப்படவில்லை. அவருடைய செவி திறந்திருக்கு மென்று நான் நிச்சயமாக எதிர்பார்க்கிறேன்.

இந்த நாட்டுக்குத் தமிழ் நாடு என்று பெயர் வைக்கவேண்டு மென்று எதிர்க்கட்சியினர் சொல்லச் சொல்ல, அதனை வைப்பதற்கு நீண்டகாலம் தாமதிக்கிற முறையிலே, இப்பொழுது வைக்க மாட்டோம், ஒத்தி வைக்கிறோம் என்று சொல்லும் முறையிலே, தமிழ் நாட்டு மக்களை மேலும் மேலும் தத்தளிக்கச் செய்கிறார்கள் அமைச்சர்கள். அப்படித் தத்தளிக்கிற தமிழ்நாட்டு மக்கள் என்றுமே தத்தளித்துக் கொண்டிருக்கமாட்டார்கள். ஏதாவது ஒரு நேரத்தில் ஆத்திரத்திற்கு ஆளாவார்கள். அந்த ஆத்திரம் அமைச்சர்களுக்கு நல்லதல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் நாட்டிலுள்ள மக்களைப் பார்த்து உங்கள் நாடு எந்த நாடு என்று யாராவது மாற்றார் கேட்டால், வேற்று நாட்டினர் கேட்டால்—செட்டிநாட்டு அரசர் முத்தையா செட்டியார் போன்றோர் எத்தனையோ வெளி நாடுகளுக்குச் செல்லுகிறார்கள்—எங்கேயிருந்து வருகிறார்கள் என்று அவர்களைக் கேட்டால், அவரே தமிழ்நாடு என்று சொன்னாலும்—அவர் தமிழ் நாட்டிலே ஒரு முக்கியமான செல்வாக்குப் படைத்த வணிகர் என்று சொன்னாலும்—செட்டிநாடு என்ற பகுதிக்கு அரசர் என்ற பரம் பரைப் பட்டம் பெற்றவர் என்று சொன்னாலும், தமிழ்நாடு என்று சொன்னால், "எங்கே இருக்கிறது" என்றுதான் கேட்பார்கள் உலகத்தில் உள்ளவர் எவரும். அப்படிப்பட்ட கேவலமான நிலைமையை தமிழ் நாட்டு மக்களுக்கு உண்டாக்கியிருக்கிற அமைச்சர்கள் வெட்கப்படவேண்டும். நாங்கள் தமிழ் நாட்டிலிருந்து வருகிறவர்கள், தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று சொன்னால், அது எங்கே இருக்கிறது என்று கேட்டால், அதைவிட தமிழ் மக்களுக்கு இழிவான நிலைமை வேறு எப்படித் தோன்ற முடியும்? சில நாட்களுக்கு முன்னர் ருஷிய நாட்டிற்குச் சென்றிருந்த தமிழ்ப் பேராசிரியர் ஒருவர் சீனுவிலே நடைபெற்ற ஒரு மாநாட்டிற்குச் சென்றிருந்தார். சீன நாட்டைச் சேர்ந்த பெருமக்கள். சிலர் கூடி இருந்தார்கள். இந்தியாவைச் சேர்ந்த மிகப் பெரிய அறிவாளர்கள் சிலர் அந்த மாநாட்டிலே கலந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்ளும்பொழுது, "நான் பெங்காலிலிருந்து வருகிறேன்" என்று சொன்னார். பெங்கால் என்று சொன்ன உடனே சீனக்காரருக்குத் தெரிந்திருக்கிறது. தமிழ் நாட்டிலிருந்து சென்ற பேராசிரியர், நான் தமிழ் நாட்டிலிருந்து வருகிறேன் என்று சொன்னபோதோ, தமிழ் நாடு எங்கேயிருக்கிறது என்று கேட்டிருக்கிறார்கள். எங்கள் தமிழ் நாடு நீண்டதொரு வரலாறு பெற்றது, ஒருகாலத்தில் சைனுவுடன் வாணிகத் தொடர்பு பெற்றிருந்தது, அப்படிப்பட்ட தமிழ் நாட்டை நீங்கள் அறியாததற்குக் காரணம், எங்களுடைய தமிழ்

[Sri K. Anbazhagan] [24th February 1961

நாட்டிற்கு "மெட்ராஸ் ஸ்டேட்" என்ற பெயர்தான் வழங்குகிறது என்று சீனுக்காரர்களிடத்திலே, தமிழ் நாடு என்ற ஒன்று இந்தியாவில் இருக்கிறது என்று தாழ்மையுடன் தெரிவிக்க வேண்டிய நிலைமை, தமிழ் படித்த அறிஞருக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலைமையை மாற்றுவதற்கு ஏன் நம்முடைய அமைச்சர்கள் முன்வரக்கூடாது?

உண்மையாகவே, தமிழ் நாடு என்று அழைப்பதிலே, தமிழ் நாட்டிற்கு எந்த வகையிலே கேடு? ஏதாவது ஒரு வகையிலே கேடு ஏற்படுகிறது என்று சொன்னால், தமிழ் நாடு தாழ்ந்துவிடுமென்று சொன்னால், தமிழ்நாடு பாதிக்கப்படலாமென்று சொன்னால், அந்த வாதத்தை எண்ணிப் பார்க்கவேண்டிய அவசியம் என்போன்றவர்களுக்கு ஏற்படும். ஆனால் "தமிழ் நாடு" என்று பெயர் வைத்தால் என்ன லாபம் என்று ஒரு அமைச்சர் கேட்கிறார். நான் சொல்லுகிறேன், "நான் தமிழன்" என்று சொல்லிக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லாத அளவுக்கு அந்தப் பெயர் நம்மைக் காப்பாற்றும். இன்றைய தினம் நான் சென்னை ராஜ்யத்திலிருந்து வருகிறேன் என்று சொன்னால், நம்முடைய பெயரை—நிதி அமைச்சர் சுப்பிரமணியம் என்று சொல்லலாம், அமைச்சர் பக்தவத்சலம் என்று சொல்லலாமே தவிர—நான் தமிழர் என்று சொன்னால்தவிர நாம் யார் என்று உலகத்திற்குத் தெரியாது. தமிழர் என்பதை உலகத்திற்குச் சொல்ல வேண்டுமா, வேண்டாமா என்பதை நமது அமைச்சர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நாம் தமிழராகப் பிறந்தவர்கள். (ஸ்ரீ என். ஆர். தியாகராஜன்: திராவிடராக இல்லையா?) (சிரிப்பு.)

இடையிலே ஒரு நண்பர் திராவிடர் என்று சொல்லக்கூடாதா என்கிறார். கொஞ்சம் உணர்ச்சி உள்ளவர்களும், மானமுள்ளவர்களும், நாட்டை அறிந்தவரும் திராவிடர் என்று சொன்னால், தமிழருக்கு அது பெருமையென்றுதான் நிச்சயமாகக் கருதுவார்கள். அகில இந்திய அமைப்பிலே உணர்ச்சி வசப்பட்டவர்கள், இந்தியர் என்று சொன்னாலும், தமிழர் என்று சொன்னாலும் ஒன்றுதான் என்று கருதுகிறார்கள். இந்த இரண்டுக்கும் உள்ள வேற்றுமையை அந்தச் சொற்களை அறிந்தவர்கள் உணருவார்கள். ஆனால் சொற்களை அறியாமல் கற்களை அறிந்தவர்களுக்கு இந்த உண்மை தெரியாது!

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது கற்களை யார் அறிந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை உலகம் அறிந்து கொண்டிருக்கிறது. (சிரிப்பு).

SRI K. ANBAZHAGAN: கற்களை அறிந்து கொண்டிருப்பவர்கள் என்று சொல்லும்பொழுது, அமைச்சர்களுக்கு ஒரு விதமான கல்தான் தெரியும் போலும். மற்றொரு கல் சித்திரக்கல், சிற்பக்கல், கலை உணர்ச்சி தரும் கல். அதை அறிந்தவர்கட்கு . .

THE HON. SRI C. SUBRAMANIAM: அதைத்தான் நானும் சொன்னேன். (சிரிப்பு.)

24th February 1961]

**SRI K. ANBAZHAGAN:** தமிழ் உணர்ச்சியூட்டும் கல், தமிழ் நாடு என்று பெயர் வழங்கத் தயங்கும் அமைச்சர்களைத் தவிர மற்ற தமிழர்களுடைய உள்ளத்தில் அழுத்தமாகப் பதிந்து விட்டது. நியாயமான உணர்ச்சியை ஏற்றுக்கொள்வதிலே அமைச்சர்களுக்கு என்ன மான அவமானம் ஏற்பட்டுவிடும்? மாற்றுக் கட்சியினர் சொல்லியபின் இதைச் செய்யவேண்டுமா என்று நினைத்து மறுப்பது அமைச்சர்களுக்கு இழுக்கே ஆகும். அவர்களாகவே தமிழ்நாடு என்று பெயரிட்டால், மாற்றுக் கட்சியில் உள்ளவர்கள் வாழ்த்தாமல் என்ன செய்வார்கள்? அது மட்டுமல்ல, தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்கு இவ்வளவு மறுப்புச் சொல்லுகிறவர்கள், தமிழ்நாடு என்று சொன்னால் என்ன இழுக்கு என்று சொல்லட்டும். தமிழ்நாடு என்று பெயர் வைப்பது நம்முடைய பிறப்பு உரிமை என்று நான் சொல்லுகிறேன். தமிழ் நாட்டிலே தமிழன் மூச்சோடு வாழ்கிற வரையில், தமிழ் நாட்டில் தமிழ் இனம் இருக்கிற வரையில், "தமிழர் என்று ஓர் இனம் உண்டு, தனியே அவருக்கொரு குணம் உண்டு" என்று நாமக்கல் கவிஞர் பெருமையாகப் பாடியிருக்கிற மக்கள் உள்ள வரையில், அவர்கட்கு அடையாளமாக என்ன தரப்போகிறீர்கள் என்று கேட்கிறேன். அடையாளமாக ஒரு பட்டயம் தருவீர்களா? தமிழர் என்று நெற்றியிலே எழுதி ஒட்டுவீர்களா? தமிழ் நாட்டார் என்ற பெருமையைப் பெறுவதற்கு இந்தப் பெயரை வைக்கச் சொல்லி கேட்கிறோமே தவிர, பலர் எண்ணுவதைப் போல், நாட்டைப் பிரிப்பதற்கு இந்தப் பெயர் தேவை என்று நாங்கள் கேட்கவில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த நாங்கள் இந்த நாட்டைப் பிரிப்பதற்காக, இந்த நாடு விடுதலை அடைய வேண்டுமென்பதற்காக, தென்னாடு தனி ஆட்சி பெறவேண்டுமென்பதற்காக, தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று தங்களைக் கேட்கவில்லை. இந்த நாடு வாழ்வதற்கே இந்தப் பெயரை அமைக்க வேண்டுகிறோம். நாடு பிரியவேண்டுமென்று வற்புறுத்துவோர் இந்தப் பெயரை சென்னை சர்க்கார் வைக்கவில்லை, டெல்லி சர்க்கார் வைக்கவில்லை, அந்த மனம் அவர்களுக்கு ஏற்படவில்லை, எனவே பிரியவேண்டுமென்று சொல்லக்கூடும். மாறாகத் தமிழ் நாடு என்று பெயர் வைத்த காரணத்தினாலேயும் நாடு பிரிவினை நின்றுவிடாது. ஆனால் இந்தப் பெயர் வைத்தால், ஒருவேளை அமைச்சர்களிடத்தில் ஏற்படுகிற நல்லெண்ணத்தினால் பிரிவினையை, பொதுமக்கள் கொஞ்ச காலத்திற்குத் தள்ளிப் போடலாம். அதற்கப்பாலும் அந்த நல்ல எண்ணம் ஆட்சியாளருக்கு உதவலாம். மாறாக அரசியல் லாபம் எது என்று நாங்கள் கருதுவோமேயானால், நீங்கள் பெயர் வைக்காமல் இருப்பதுதான் எங்களுக்கு லாபம். அரசியல் லாபத்தை நாங்கள் கருதவில்லை. நாட்டிற்குப் பெருமை என்று கருதுவதால்தான் தமிழ்நாடு என்று பெயர் வைக்கவேண்டுமென்று நாங்கள் கேட்கிறோம். ஒருவேளை அமைச்சர் அவர்கள் நாங்கள் எல்லோரும் பேசியவுடன், சுடச்சுடப் பதில் சொல்லும்பொழுது, "இன்று நாங்கள் அந்தப் பெயரை வைக்கமாட்டோம், உங்களால் என்னதான் செய்ய முடியும்", என்று எங்களைப் பார்த்துக்

[Sri K. Anbazhagan] [24th February 1961

கேட்கலாம். "எண்ணிக்கை பலத்தைப் பொறுத்தவரையில் 50-க்கு மேல் எதிர்க்கட்சியில் சேராது, நாங்கள் 150 பேர் இருக்கிறோம், நீங்கள் எங்களை அசைக்க முடியாது," என்று சொல்லக்கூடும். ஆகவே, அமைச்சரை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன், நியாயத்திற்காகக் கேட்டுக்கொள்கிறேன், இன்று இந்தப் பெயரை ஏற்று வைக்காமல் இருந்தால், தேர்தல் முடியும் வரை தயவுசெய்து வைக்காமல் இருந்து பார்க்கட்டும். 1962 வரை தமிழ்நாடு என்று பெயர் வைக்காமல் தமிழ்நாட்டு மக்களைத் தேர்தலில் சந்தித்துப் பார்க்கட்டும். அந்த நேரத்தில், நிச்சயமாக இந்தப் பெயர் வைக்காத காரணத்தினாலே, பொது மக்கள் தமது மாறுபாட்டைக் காட்டுகிறார்களா, இல்லையா என்று பார்க்கட்டும்.

11-30 a.m. **THE HON. SRI C. SUBRAMANIAM**: 1956-ல் கூட இந்தப் பெயரை வைக்க வேண்டுமென்ற பிரச்னையைத்தான் கிளப்பினார்கள். அதன் பிறகு 1957-ல் தேர்தல் நடந்தது. அதைப் போலவே இப்பொழுதும் தேர்தலுக்கு முன் இந்தச் சமயத்தில் இதைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அப்பொழுதும் இப்படியே தான் சொன்னார்கள். அதன் பலன் என்னவாயிற்று என்பது நம் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அதைப்போலவே இப் பொழுது அந்தப் பிரச்னையைக் கொண்டு வந்து மிரட்டுகிறார்கள். அப்படி மிரட்டலாம் என்று நினைப்பது கனம் அன்பழகனுக்கு அவ்வளவு அழகல்ல என்பதை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

**SRI K. ANBAZHAGAN**: கனம் அமைச்சர் கேட்டார், 1957-ல் நடந்த தேர்தலில் இந்தப் பெயர் பிரச்னையைக் கிளப்பியுங்கூட பலன் என்னவாயிற்று என்று. அதன் பலனைத்தான் ஆட்சி யாளர் அதிகப்படியாக வெற்றி பெற்றதாகவும் சொன்னார். அந்தப் பெயர் வைக்கும் பிரச்னையும் சேர்ந்துதான் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் 15 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கு வந்திருக்கிறோம். மாறாக இந்தப் பிரச்னையைத் தேர்தல் காலத்தில்தான் கொண்டு வருகிறோம் என்று சொல்வது அமைச்சருக்கு அழகல்ல, உண்மை யுமல்ல. அதைப்போலவே இப்பொழுதும் இந்தப் பெயரை வைக்க வேண்டாம் என்று அமைச்சர் நினைத்தால், அதில் நியாயம் இருக்குமானால் வரப்போகும் தேர்தல் வரை இந்தப் பெயரை வைக்காமல் இருந்து பார்க்கட்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்த தேர்தலுக்குள் பெயர் வைக்க மாட்டோம் என்று ஆட்சி யாளர் சொன்னால் வரப்போகும் தேர்தலில் பொது மக்கள், நாட்டு மக்கள், அதற்கு ஏற்ற முடிவைக் கொடுப்பார்கள் என்பதை மட்டும் நான் வலியுறுத்த விரும்புகிறேன். பொது மக்களுடைய கோரிக்கை அருகதையற்றது, நியாயமற்றது என்று சொல்வது சரியல்ல. உரிமை வேட்கை கொண்ட மக்கள்தான் இந்தப் பெயரை வைக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். பொது மக்களின் உணர்ச்சி அதிக நாள் காத்திருக்காது. எப்பொழு தாவது அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு திடீரென எழலாம். அவர்களுடைய உரிமையைப் பெறுவதற்குச் சரியான சமயத்தில் அவர்கள் கிளர்ச்சி செய்ய முற்படுவார்கள். பொது மக்கள்

24th February 1961] [Sri K. Anbazhagan]

கிளர்ச்சி செய்ய எழுந்தால் அதை எளிதில் எவரும் அடக்கிவிட முடியாது. தங்களுக்குள்ள அதிகாரத்தைக்கொண்டு கிளர்ச்சியை அடக்கிவிடலாம் என்று நினைத்துக்கொள்ளலாம். அப்படி அடக்கி விடும் மனப்பான்மை இருந்தால், பொது மக்களுடைய ஒருமித்த கருத்தை எடுத்துக்கொள்ளவில்லையானல், இதுதான் ஜனநாயகமா என்று கேட்க விரும்புகிறேன். அப்படிக் கிளர்ச்சி செய்வதை அடக்கிவிட்டு அவர்கள் கேட்கக்கூடிய இயற்கை உரிமையை மறுப்பது என்று நினைத்தால் அது சரியான ஜனநாயகமா என்று எண்ணிப்பார்க்க வேண்டும். ஆகவே பொது மக்களுடைய அடிப் படையான விருப்பத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்திக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இப்படிப் பெயர் வைப்பதால் அது யாரையும் பாதிக்கப் போவதில்லை. எவரையும் பாதிக்காமல் இருக்கும்போது மக்க ளுடைய கருத்தை ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று கேட்கிறேன். யாரை பாதிக்கிறது என்று சொல்லட்டும்? என்ன விபரீதம் வந்துவிடப்போகிறது? பின்னும் இதை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்று அமைச்சர் சொல்வதற்கு அதைக் கேட்க எனக்கு வருத்தமாக இருக்கிறது. தமிழ் நாடு என்று பெயர் வைப்பதை எல்லோரும்தான் வரவேற்கிருர்கள். தமிழ்நாடு என்ற பெயர் வேண்டாம் என்று சொல்வதற்கு யாரும் முன் வரவில்லை அமைச்சர்களைத் தவிர.

இப்படிப் பெயர் வைக்கவேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் சொல்லவில்லை. சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இந்தப் பெயரை ஏற்க வேண்டுமென்று தக்கார்பலர் சொல்லிக்கொண்டு வருகிருர்கள். அதை ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது? எதிர் கட்சிகள் சொல்வதோடல்லாமல் தகுதிமிக்க காங்கிரஸ்காரர் களுங்கூடத் தமிழ்நாடு என்ற பெயரை வைக்கவேண்டுமென்று சொல்லிக் கொண்டு வருகிருர்கள். எந்தக் கட்சியும் மாறுபட்ட கருத்தைச் சொல்லவில்லை. கம்யூனிஸ்ட் கட்சியும் மாறுபட்ட கருத்தைச் சொல்லவில்லை. ஜனநாயகக் காங்கிரஸ் கட்சியும் மாறு பட்ட கருத்தைச் சொல்லவில்லை. சோஷலிஸ்டு கட்சியினரும் மாறுபட்ட கருத்தைச் சொல்லவில்லை. நாட்டு மக்களுக்கு வழி காட்டிய காங்கிரஸ் பெரியவர்களும் இதற்கு மாறுபட்ட கருத்தைச் சொல்லவில்லை. அப்படி எல்லோரும் ஒருமிக்கச் சொல்லியும் அதை ஏற்றுக்கொள்ளாத காரணம்தான் என்னவென்று தெரிய வில்லை. இந்த நிலைமையில் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் என்ன லாபம் என்று இந்த நாட்டை ஆளக்கூடிய ஓர் அமைச்சர் கேட்கிருர். அவர் அமைச்சராக இருப்பதால் நாட்டின் லாபத்தைக் கருதவேண்டியதுதான். லாபத்தில் அவருக்கு அக்கறை இருக்க வேண்டியதுதான். அவர் கேட்பது எப்படி இருக்கிறது என்ருல் ஆடை எதற்காக உடுத்திக்கொள்ள வேண்டும், அதனுல் என்ன லாபம் இருக்கிறது என்று கேட்பது போன்றதாக இருக்கிறது. ஆடையை அணிந்து கொள்வதால் அதில் லாபம் இல்லை. அது செலவினத்தைச் சேர்ந்ததாகத்தான் இருக்கிறது. மானத்தை

[Sri K. Anbazhagan] [24th February 1961

இழந்துவிட்டால் ஆடை அணிந்துகொள்ளவேண்டியதில்லை. நாட்டு மக்களுடைய மானம் பாதிக்கப்படுகிறது என்பதால்தான் பெயரை மாற்றி அமைக்கவேண்டும் என்று சொல்லுகிறோம். அப்படிப்பட்ட மானத்தைக் காப்பாற்ற வேண்டியது இந்த அரசாங்கத்தினுடைய கடமை அல்லவா? மற்றொரு அமைச்சர் சொல்லுகிறார், "பெயரை மாற்றி விட்டால் வெளி நாட்டவருக்கு 'தமிழ் நாடு' என்ற பெயர் தெரியாது என்பதால். வெளி நாட்டி லிருந்து கடன் வாங்க முடியாது" என்று. கடன் கொடுப்பார்களா என்றும் கேட்கிறார். இந்த முறையில் அமைச்சர் பேசுவது. கடன் வாங்குவதில் அமைச்சர்கள் அக்கறை கொண்டிருக் கிறார்களேயொழிய நாட்டின் மானத்தைக் காப்பாற்றுவதில் அவர் கள் அக்கறை கொள்ளவில்லை என்பதையே காட்டுவதாகும். ஆனால் வெளிநாட்டிலிருந்து கடன் வாங்கக்கூடிய அதிகாரம் எல்லாம் மத்திய அரசாங்க அமைச்சர்களுக்குத்தான் இருக்கிறதேயொழிய மாநில அமைச்சர்களுக்கு இல்லை. சென்னை அரசாங்க அமைச்ச கள் வெளிநாடு சென்று கடன் கேட்டாலும் நேரடியாக யாரும் கொடுக்கப் போவதில்லை. மேலும் 'தமிழ் நாடு' என்ற பெயர் வெளிநாடுகளுக்குத் தெரியாது, எனவே கூடாது என்றால்—முதல் அமைச்சரை மட்டும் வெளிநாடுகள் அறியுமா? தமிழ் நாட்டு முதல் அமைச்சருக்கும் வெளி நாட்டுத் தொடர்பு கிடையாது. அவரை வெளிநாடு அறியாது. கனம் வெங்கட்ராமன் அவர்கள் அமெரிக்கா முதலிய நாடுகளுக்குச் சென்றுவிட்டு வந்திருப்பதால் அவருக்கு வெளிநாட்டுத் தொடர்பு உண்டு. அவரை வெளிநாடு அறியும். ஆகவே அவர்தான் முதலமைச்சராக இருக்கவேண்டும் என்று நாம் வாதிடவில்லை. ஆனால் இப்படிப்பட்ட காரணங்களையா அமைச்சர்கள் எடுத்துக் கூறுவது என்று கேட்கிறேன். 'தமிழ் நாடு' என்று பெயர் வையுங்கள் என்று மக்கள் சொன்னால் அதற்கு மறுப்புக்கூற முதலமைச்சரே ஆராய்ச்சிகள் பல செய்து அதற்கு வியாக்யானமும் கொடுத்துள்ளார். வெகு காலத்திற்கு முன், சங்க காலத்தில் இந்தப் பெயர் கிடையாது என்றும், பாரதியார் காலத்தில்தான் முதன் முதலாகத் தமிழ் நாடு என்ற பெயர் வைக்கப்பட்டது என்றும் சொல்லியுள்ளார் முதல் அமைச்சர். இதன் உண்மை காண ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய ஏடுகளைப் புரட்டிப் பார்க்க வேண்டும். முதலமைச்சருக்குத் தெரியாவிட்டாலும் ஏடுகள் இன்னும் மறைந்து போகவில்லை. அவைகள் அப்படியே தான் இருக்கின்றன. அவற்றுள்ளும் பல பாடல்களில் தமிழ்நாடு என்னும் பெயர் வந்திருக்கிறது. பழந் தமிழ் இலக்கியங்களில் அப்படிப்பட்ட பெயர் கிடையாது என்று சொல்லி இருக்கிறார். சங்க காலத் தமிழ் இலக்கியத்தை அவர்கள் எந்த அளவு படித்திருக்கிறார் என்பது எனக்குத் தெரியாது. நல்ல வேளை நான் அந்த அளவு படிக்கவில்லை! சங்க இலக்கியத்தில் தமிழ் நாடு என்ற பெயர் இல்லை என்று சொல்வது அவ்வளவு சரி யல்ல. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட சங்க இலக்கியப்பாடல்களில் தமிழ் நாடு என்ற பெயர் வழங்கி யுள்ளது தெரிய வருகிறது. சேர, சோழ, பாண்டிய நாடுகள் தனித்தனியாக இருந்த காலத்திலேயே தமிழ் நாடு என்ற பெயர்

24th February 1961] [Sri K. Anbazhagan]

இருந்திருக்கிறது. பற்பல இலக்கியங்களில் அந்தப் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. தொல்காப்பியத்தில் அதன் பாயிரத்தில் அந்தப் பெயர் இருக்கிறது. பதிற்றுப்பத்தில் இந்தப் பெயர் வழங்கியிருக்கிறது. பரிபாடலில் இந்தப் பெயர் வந்திருக்கிறது. எல்லாவற்றிலும் இந்தப் பெயர் இருக்கிறது என்பதை அதை படித்துப் பார்த்தாலே நன்ருகத் தெரியவரும். வேண்டுமானுலும் கனம் சுப்ரமணியம் அவர்கள் அவைகளைப் படித்துப் பார்க்கட்டும். முன்னர் ஒரு முறை கல்வி அமைச்சர் அவர்கள் சட்டமன்றத்தில் பேசும்போது இலக்கியத்தில் உண்டோ இப்பெயர் என்று கேட்டுள்ளார். அதற்கு நான் புறநானூற்றுப் பாடலில் இப்பெயர் வழங்கியதை எடுத்துக்காட்டியுள்ளேன். இன்னும் பல வரிகளை சான்ருகப் படித்துக்காட்டமுடியும். "தண்டமிழ் வேலித் தமிழ்நாட்டு அகமெல்லாம்" என்று பரிபாடலில் கூறப்பட்டிருக்கிறது. பரிபாடல் நேற்று பிறந்தது அல்ல. சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது. அப்படிப்பட்ட பரிபாடலில் 'தண்டமிழ் வேலித் தமிழ்நாடு' என்று கூறப்பட்டுள்ளதானது, செந்தமிழ் நாடு ஆகிய சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்குத் தமிழ் எல்லையாக அமைந்துள்ளது என்ற கருத்து இருக்கிறது. பதிற்றுப் பத்து எட்டில் 'இமிழ் கடல் வேலித் தமிழகம்' என்று வருகின்றது. இதைப் போலவே சிலப்பதிகாரத்திலும் வருகிறது. அது, "இமிழ் கடல் வேலித் தமிழ்நாடு ஆக்கிய" என்பதாகும். ஒலிக்கக்கூடிய கடல் எல்லையாகத் தமிழ் நாடு இருக்கிறது. 'தென் தமிழ்நாடு ஒருங்கு காண' எனவும், 'தென் தமிழ் நன்ருடு' எனவும், 'தென் தமிழ் நாடு ஆளும் வேந்தர்' எனவும் சிலம்பு ஒலிக்கிறது. இந்தப் பெயர் ஆட்சி இன்று நேற்று வந்தது அல்ல. பழங்காலத்திலிருந்தே தமிழ் நாட்டை ஆண்டு வந்த வேந்தர்கள் இந்தப் பெயரை ஏற்றுருக்கிருர்கள். "இமிழ் கடல் வேலித் தமிழகம் அறிய" என்பதும் சிலப்பதிகாரம் இதற்கு, "ஆரவாரத்தையுடைய கடல் சூழ்ந்த நிலத்திலே, வடக்கும், தெற்கும், குடக்கும், குணக்கும், வேங்கடங் குமரி—தீம்புனல் பெளவம் எனத் தமிழ் நாட்டிற்கு எல்லை கூறப்பட்ட" என்பது அடியார்க்கு நல்லார் உரை. தமிழ்நாடு இந்த எல்லைக்குள் இருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்' என்று மணிமேகலையிலும் வருகிறது. 'தமிழ்நாடு' என்னும் பெயர், கம்பராலும், சேக்கிழாராலும் கையாளப்பட்டுள்ளது. குமரகுருபரரோ 'விரிந்த தமிழ்நாடு' என்று பாடினுர். ஆகவே சமீபத்தில்தான் சொல்லப்படுகிறது, அதுவும் பாரதியார் காலம் முதற்கொண்டு தான் சொல்லப்படுகிறது என்பது அறியாமையேயாகும். அந்தக் காலத்திலேயே தமிழ்ப் புலவர்கள் வழங்கிய பெயரை இப்பொழுதும் வைப்பதற்கு ஏனே மனம் வரவில்லை? என்ன கஷ்ட நஷ்டம் ஏற்படப்போகிறது என்று கேட்கிறேன். இவைகளையெல்லாம் அமைச்சர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மட்டுமே சொல்லி இருந்தாலாவது ஏற்கமாட்டேன் என்று சொல்லலாம். அகில இந்திய காங்கிரசோ அன்றி டில்லி மத்திய அரசினரோ இந்தப் பெயரை வைப்பதற்கு மறுப்பு சொல்லவில்லை. அவர்களுக்கே மறுப்பு இல்லாதபோது

[Sri K. Anbazhagan] [24th February 1961

இங்குள்ளவர்களுக்கு மட்டும் ஏன் அந்த மனம் வரவில்லை? முன்னாள் காங்கிரஸ் தலைவர்கள் சொல்லியும் ஏன் மறுப்பு? அண்மையில் காஷ்மீர் அமைச்சர் ஒருவர் கூடத் தமிழ்நாடு என்று பெயர் வைப்பது பொறுத்தமாகத்தான் இருக்கிறது என்று கூறியுள்ளார். அந்தப் பெயர் இனிமையாக இருக்கிறது என்றும் கூறுகிறார். அந்த மனப்பான்மை நமது முதல் அமைச்சருக்கு ஏனோ வரவில்லை? அவருக்குத் தோன்றுவது கூட இங்குள்ளவர்களுக்குத் தோன்றவில்லையா? நாம் இன்னும் பெயரை மாற்றுமல் இருப்பதைக் கண்டு வெளி நாட்டவர்கள்கூட வெட்கப்படுகிறார்கள். அதைக் கண்டு நாமும் வேதனைப்படுகிறோம். அண்மையில் மதருஸ்—சென்னை ராஜ்யம் என்னும் பெயரை மாற்றித் தமிழ்நாடு என்று வைக்காவிட்டால் கிளர்ச்சி நடத்துவேன் என்று தமிழரசு கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் கூறினர். அரசியல் நோக்கத்தோடு இந்தக் கிளர்ச்சி செய்யவில்லை என்றும் சொன்னர். கொள்கை அடிப்படையில் தமிழரின் மானத்திற்காகக் கிளர்ச்சி என்றும் சொன்னர். கனம் நிதி அமைச்சர் அவர்கள் கிளர்ச்சியை நிறுத்தினல் இதை ஆலோசிப்பதாகச் சொன்னதால் அந்தக் கிளர்ச்சியை நிறுத்தி வைத்துள்ளார். இந்தப் பிரச்னை இன்று நேற்று கிளம்பியது அல்ல. எவ்வளவோ காலமாக இருந்து வருகிறது. இந்தக் கிளர்ச்சியும் தேர்தலுக்காக நடத்தப்படவில்லை. இங்குள்ள எதிர்க் கட்சிகளும் வருகிற தேர்தலை நோக்கமாகக் கொண்டு இதைக்கொண்டு வரவில்லை. இந்தப் பெயரை வைக்கவேண்டுமென்று தமிழ் பெரியார் திரு. வி. க. சொல்லி இருக்கிறார். விருதுநகர் சங்கரலிங்கனர் இதற்காகவே உண்ணுவிரதமிருந்து உயிர் விட்டார். நாடகப் பேராசிரியர் பம்பல் சம்பந்த முதலியார் அவர்களுக்கு நடத்திய பாராட்டுக் கூடத்திலேயே அவர் இதைப்பற்றி கூறியிருக்கிறார். "தமிழ்நாடு என்று பெயர் வைக்கப்பட்டு அதைக் காதாரக் கேட்கும் வாய்ப்பு தனக்குக்கிட்ட வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். "தமிழ்நாடு என்னும் பெயரை வைத்து தமிழ் நாட்டைக் காப்பாற்ற வேண்டும், பெருமைப்படுத்தவேண்டும். அந்தப் பெயரைக் கொண்டே இந்த நாட்டிற்குப் புகழ் முடி சூட்ட வேண்டும்" என்று வேண்டிக்கொண்ட தமிழறிஞர்கள் பலப்பலர் அந்தப் பெரியவர்களை மதித்தாவது இந்தப் பெயரை வைக்கக் கூடாதா? அத்தகைய பெரியவர்களையெல்லாம் அலட்சியப் படுத்த வேண்டுமா? நாட்டுக்கு வழிகாட்டிகளாக வாழ்ந்த பெரியவர்களை மதிக்க வேறு வழிதான் என்ன இருக்கிறது? வள்ளுவருக்குக் கோயில், பாரதியாருக்கு மணி மண்டபம், சேக்கிழாருக்கு செம்மண் குடிசை, கம்பனுக்குக் கல் தூண் நிலைநாட்டிவிட்டால் மட்டும் தமிழ்நாடு வாழ்ந்துவிடுமா? கம்பன் பிறந்த தமிழ்நாடு என்று பாடியிருக்கிறாரே பாரதியார், அவர் பிறந்த நாட்டுக்குத் 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்காமல், தமிழர்களை வாழ வைக்க முடியாது. தமிழை ஆட்சிமொழியாக்கிவிட்டால் மட்டும் அந்த உணர்ச்சி வந்துவிடுமா? அமைச்சர் திரு. சுப்பிரமன்யம் அவர்கள் தமிழைக் கல்லூரிப் பாட மொழியாகக் கொண்டுவருவதாகச் சொல்வதற்கும், அதே காங்கிரஸில் இருக்கும் செட்டிநாட்டு திரு. முத்தையா செட்டியார், 'தமிழை அவசரப்பட்டுக் கொண்டு

24th February 1961] [Sri K. Anbazhagan]

வராமல், சற்று பொறுத்து ஆங்கிலத்திற்குள்ள வல்லமையை இழந்துவிடாமல் கொண்டுவரவேண்டும்' என்று சொல்வதற்கும் இருக்கும் கருத்து மோதுதலே அந்தக் கட்சியிலேயே உள்ள வேற்றுமையை எண்ணிப் பார்க்கவேண்டும். தமிழ்ப் பற்று இருந்தும் சிலர் அப்படி விரும்புகிறார்களே! இந்நிலையில் அனைவருக்கும் தமிழ்ப்பற்று ஏற்பட இருக்கிறது என்று எடுத்துக்காட்ட என்ன வழியிருக்கிறது? சென்னை பல்கலைக் கழகமாக இருக்கட்டும், அண்ணாமலைப் பல்கலைக் கழகமாக இருக்கட்டும், நடுத் தெருவோ, கடைத்தெருவோ ஆகட்டும், அத்தனை பேருக்கும் தமிழ்ப்பற்று ஏற்பட, ஏன் அமைச்சர்கள் 'தமிழ்நாடு' என்று பெயரிட்டு வழி காட்டக் கூடாது என்று கேட்கின்றேன்.

'தமிழகம்' என்ற பெயரை ஆரன்மூர் அரண்மனைக்கு வைத்ததைப்பற்றி உறுப்பினர்கள் சிலர் எடுத்துச் சொன்னார்கள். அருள்கூர்ந்து எண்ணிப் பார்க்க வேண்டுகிறேன்—ஒரு அரண் மனைக்கு 'தமிழகம்' என்று பெயரிட்டு விட்டால் நாட்டு மக்கள் அதனால் மகிழ்ச்சி அடைவரா? அந்த அளவுக்கு இருப்பதாகக் காட்டப்படும் நல்லெண்ணம் அதற்குமேல் வளரவில்லையே. குழந்தையைப் பார்த்து, 'கண்ணே, மணியே' என்று கொஞ்சுகிறோம். ஆனால், வேளைக்குச் சோறு போட மறுக்கிறோம். கொஞ்சி விட்டுச் சோறு போடாவிட்டால், குழந்தை வாழ முடியுமா? ஆனால் அமைச்சர்கள் சொல்லலாம், 'சோற்றுக்கு அல்லவா நாங்களே பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம், இந்த நேரத்தில் பெயர்ப் பிரச்சினையைக் கிளரக் கூடாது' என்று. பெயர்ப் பிரச்சினையினால் எந்த அளவுக்குச் சோற்றுப் பிரச்சினை பாதிக்கப்படும் என்பதை அமைச்சர்கள் விளக்க வேண்டாமா? உணவுப் பெருக்கத்தை இது கெடுத்துவிடுமா? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு இது உலை வைத்துவிடுமா? நாட்டில் ஆற்றுக்குக் கட்டும் பாலத்தை இது இடித்துத் தள்ளிவிடுமா? தமிழகத்தி லுள்ள கடற்கரைத் துறைமுகங்களை காவிரிப்பூம்பட்டினமாகக் கடலில் மூழ்கடித்து விடுமா? தமிழ்நாடு என்று பெயர் வைத்தால் நாடு அழிந்துவிடும் என்று யாராவது ஜோஸியம் கணித்துச் சொன்னாரா? எதை வைத்துக்கொண்டு நீங்கள் தாமதிக்கிறீர் கள்? ஆகவேதான் நான் வருத்தத்தோடு, வேதனையோடு, சொல்லிக் கொள்கிறேன். 'நண்பர் திரு. சின்னதுரை அவர்கள் தீர்மானம் கொண்டு வந்தார்' என்று சொன்னாலும், 'அது திரு. சின்னதுரையினுடைய தீர்மானம் மட்டுமல்ல, ஆதரிக்கும் அன்பழ கன் தீர்மானம் மட்டுமல்ல, திரு. சசிவர்ண தேவருடைய தீர்மானம் மட்டுமல்ல, தமிழ்நாட்டிலே வாழும் மூன்றரை கோடி மக்களுடைய தீர்மானம் அது. மக்கள் அதை விரும்புகிறார்கள்'. 'அந்த விருப்பத்தை நாங்கள் அவமதித்திருக்கிறோம்' என்று வேண்டு மானால் சொல்லுங்கள். 'தமிழ்நாட்டு மக்களை மதிக்கமாட்டோம், சட்டசபையில் உறுப்பினர்களின் பெரும்பான்மை பலம் எங்களுக்கு இருக்கிறது, ஆகவே, இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொள்ள மாட்டோம்' என்று சொல்லுங்கள். நாடு உங்களுக்குத்

[Sri K. Anbazhagan] [24th February 1961

தக்க பதிலை, தக்க தருணத்தில், அவர்கள் வாக்கு தேவைப்படும் நேரத்தில் தரும். நாடு 1957-ல் இருந்தபடி 1962-ல் இருக்காது. 1962-ல் இருக்கிறபடி 1967-ல் இருக்காது. 1967-ல் இருக்கிறபடி 1972-ல் இருக்காது. அமைச்சர் திரு. சுப்பிரமணியமும் இருக்கிற இடத்திலே இருக்க முடியாது. ஆகவே, நாடே மாறும்; மக்கள் எண்ணமும் நகரும்; அப்படி நகரும்போது . . . . (கனம் நிதி அமைச்சர் அவர்களின் குறுக்கீடு) கனம் அமைச்சர் திரு. சுப்பிர மணியம் அவர்களைக் குறித்துச் சொல்லும்போது, நான் கோபித்துக்கொண்டு பேசினாலுங்கூட, நல்ல உணர்ச்சியோடு, நல்ல எண்ணத்தோடு சொல்கிறேன், மத்திய சர்க்கார் அமைச்சராகக் கூட ஆகிவிடலாம் அல்லவா? என்று சொல்கிறேன். அந்த அள வுக்கு மாற்றம் கிடக்கும். அப்படி அங்கு போகும் அளவுக்கு திறமை பெற்றிருக்கிற அவர், 'தமிழ்நாட்டிலிருந்து வருகிறேன்' என்று அங்கு சொல்ல முடியுமானால் . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லோரும் போகக் கூடிய இடத்திற்கு நானும் போய்ச் சேர்வேன் என்றுதான் . . . . (சிரிப்பு)

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் நீண்ட காலம் வாழ்ந்து, திராவிட நாட்டில் கூட அமைச்சராக இருக்க வேண்டு மென்று தான் நான் வாழ்த்துகிறேன், நான் விரும்புகிறேன்—நல்ல திறமை படைத்தவர் என்னும் காரணத்தால்.

SRI N. R. THIAGARAJAN : 'தமிழ்நாடு' என்று பேசிக் கொண்டிருந்தார் கனம் அங்கத்தினர். இப்பொழுது 'திராவிட நாடு' என்று பேச ஆரம்பித்து விட்டாரே.

SRI K. ANBAZHAGAN : உண்மையான சிந்தனை உடையவர் களுக்கு நான் சொல்வது விளங்கும் என்று நம்புகிறேன்.

அப்படிப்பட்ட அமைச்சர் திரு. சுப்ரமண்யம் அவர்கள் நீண்ட காலம் வாழவேண்டும் என்ற விருப்பத்தாலுந்தான், தமிழ்நாடு என்று பெயர் வைத்து, அதனால் அவருக்குப் புகழ் கிடைத்து, நல்லெண்ணம் மக்களிடத்தில் பரவி, மக்களெல்லாம், "தமிழ்நாடு என்று பெயர் வைத்த இவர் வாழ்க" என்று சொன்னால், அந்த வாழ்த்து அவருடைய வாழ்நாள் முழுவதும் 70 வயது அல்ல, 100 வயது அல்ல, 120 வயதும், அதற்கு மேலும் நீடிக்கச் செய்யும் என்பதால்தான் "தமிழ்நாடு என்னும் பெயரை வைத்துப் பார்த்து நீண்ட நாள் நீங்கள் வாழுங்கள்" என்று அவரை நான் வாழ்த்துகிறேன்.

ஒரு வேளை அவர்களே அந்தப் பெயரை வைத்து அதனால் திராவிட முன்னேற்றக் கழகம் சரிந்து போய்விடுமானாலும், அவர் களுக்கு ஏற்படுகிற நல்ல பெயரைக் கேட்டு முன்னேற்றக் கழக வளர்ச்சி குறைந்துவிடுமானாலும், கம்யூனிஸ்ட் கட்சிப் பிரசாரம் குறைந்துவிடுமானாலும், அதற்காகக்கூட நான் வருத்தப்பட மாட்டேன். இந்த நல்ல பெயரைத் தயவு செய்து தேடிக் கொள்ளுங்கள் என்று கேட்டுக்கொள்கின்றேன். அமைச்சர்கள்

24th February 1961] [Sri K. Anbazhagan]

எத்தனையோ தவறுதல்கள் செய்திருக்கிறார்கள். எதிர்க் கட்சியினருடைய மனதைப் புண்படுத்தியிருக்கிறார்கள். எத்தனையோ நேரத்தில் எதிர்க் கட்சியினர் சொல்கிறார்கள் என்ற காரணத்திற்காகவே நல்ல தீர்மானங்களைத் தோற்கடித்திருக்கிறார்கள். எந்த நல்ல திட்டமாக இருந்தாலும் அவமதித்திருக்கிறார்கள். இந்த ஒரு காரியத்திலாவது, 1962 மார்ச் தேர்தலுக்கு முன்பாக அமைச்சர்கள் தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்டிக்கொள்ள வேண்டுகிறேன்.

நண்பர் திரு. சின்னதுரை அவர்களுடைய தீர்மானத்திற்கு மக்கள் ஆதரவு இல்லையென்று கருதினால் அமைச்சர் அவர்கள் தமிழ்நாட்டிலுள்ள கன்யாகுமரிக்குச் சென்றாலும், கோயமுத்தூருக்குச் சென்றாலும், திருப்பதி மலையடிவாரத்தில் உள்ள திருத்தணிக்குச் சென்றாலும், வேறு எந்த இடத்திற்குச் சென்றாலும் அங்கு பொதுக்கூட்டம் நடத்திக் கேட்கட்டும். என்னை வேண்டுமானால் அழைத்துக் கொண்டு போகட்டும். அவரோடு நான் வருவது அவருடைய பெருமைக்கு உகந்ததல்ல என்று கருதினால் திரு. கருத்திருமன் அவர்களையே அழைத்துக் கொண்டு போய்க் கூட்டம் நடத்தட்டும். பொது மக்களை நோக்கி வேண்டுமானால் இளம் பிள்ளைகளைக்கூடப் பார்த்து, "தமிழ்நாடு என்று பெயர் வைக்கலாமா?" என்று கேட்கட்டும். 'வேண்டாம்' என்று சொல்லுபவர்களைக் காணவே முடியாது. வேண்டும் என்று சொல்கிறவர்களாகத்தான் அத்தனை பேரும் இருப்பார்கள். அந்தப் பெரும்பாலோருடைய விருப்பத்தை அமைச்சர் அவர்கள் மதித்துச் செயலாற்றட்டும். சட்டசபையிலுள்ள பலத்தை மட்டும் எண்ணிக் கொண்டிருக்கக்கூடாது. சட்டசபைக்கு மேற்பட்டதாக மக்கள் மன்றம் இருக்கிறது. அதை மதித்து, தமிழ்நாடு என்று பெயர் வைக்கட்டும். அதை விரும்பாவிட்டால், 'தமிழகம்' என்ற பெயரையாவது ஏற்றுக் கொள்ளட்டும். 'தமிழ் நாடு' 'தமிழகம்' என்பவற்றுள் இதைத்தான் வைக்கவேண்டுமென்று நான் வற்புறுத்தவில்லை. நாடு விரும்பும் நல்ல பெயரை வைக்கவேண்டுமென்ற என்னுடைய வேண்டுகோளை, அவைத் தலைவர் அவர்கள் மூலமாகத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

SRI M. R. KANDASAMI MUDALIAR : இப்பொழுது பேசிய நண்பர் அவர்கள், பாரதியாரே இந்தத் 'தமிழ்நாடு' என்ற பெயரை நம் ராஜ்யத்திற்கு வைப்பதற்காகவும், தமிழ் வளர்ச்சிக்காகவும், தமிழர்களுக்காகவும் அரும்பாடுபட்டவர் என்று சொன்னார். ஆனால், அந்தப் பாரதியாருடைய பாடலைப் பள்ளிக்கூடத்தில் வைக்கக்கூடாது என்று தடுத்த கட்சியினர் இன்றைக்கு பாரதியாருக்காக இவ்வளவு பரிந்து பேசி முதலைக் கண்ணீர் விடுகிறார்களே, இது நியாயமா?

DEPUTY SPEAKER : It is not a point of order.

[24th February 1961

**Sri K. SATTANATHA KARAYALAR :** உதவி சபாநாயகர் அவர்களே, திரு சின்னதுரை அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற இந்தப் பிரேரணையை ஆமோதித்து ஒரு சில வார்த்தைகள் கூற அவாவுகின்றேன். தமிழ்நாடு என்று நம் ராஜ்யத்திற்குப் பெயர் வைக்கவேண்டுமென்ற கோரிக்கை இன்று நேற்று எழுந்தது அல்ல. நீண்ட நெடு நாட்களுக்கு முன்பே, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிலே எழுந்த ஒரு விஷயமாகும். ஆக, இதை இத்தனை காலம் தாழ்த்திக் கொண்டு போக வேண்டிய அவசியம் இல்லை.

ராஜ்யப் புனரமைப்புக்கு முன்பாகவே பல பகுதிகள் ஒன்றாக இணைந்து இருந்த காரணத்தால், இதற்கு 'மதராஸ்' என்று பெயர் வைத்திருந்ததை ஓரளவு ஒப்புக்கொள்ளக்கூடும். ஆனால், 1—11—1956-க்குப் பிறகு ராஜ்யங்கள் பிரிந்தபின், தமிழகம் இன்று தமிழ் பேசக்கூடிய பகுதி முழுவதையும் ஒன்றாகக் கொண்டிருக்கிறது. 1-11-1956-க்குப் பிறகாவது இந்த பெயரை மாற்றுவதில் இந்த மந்திரிசபை முன்கூட்டியே வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. துரதிருஷ்டவசமாக இந்த மந்திரிசபைக்கு சாதாரணமாக முன்னே விட்டுப் பின்னே பிடிப்பதுதான் பரம்பரையாக இருந்து வருகிறது. ராஜ்யப் புனரமைப்புக் காலத்திலேயே எனக்கு ஒரு சந்தர்ப்பத்தில் இது தெரியவந்தது. 1—11—1956-இல் ராஜ்யப் புனரமைப்பு ஏற்பட்டது. அதற்கு முன்பு இந்தச் சபையில் உள்ள ஒருசில அங்கத்தினர்கள்—நாங்கள் அப்பொழுது கன்யாகுமரி, செங்கோட்டைப் பகுதிகளிலிருந்து திருவிதாங்கூர்—கொச்சி அசெம்பிளியில் இருந்தோம். அந்தச் சந்தர்ப்பத்தில் ராஜ்யங்களை எந்த முறையில் பிரிப்பது என்ற பிரச்னை வந்த போது, ஒரே ஒரு பகுதி பிரிக்கப்படும் என்று சந்தேகப் பட்டோம். அங்கேயிருந்த மலையாள நண்பர்கள், இதை முன் கூட்டியே கருதி, யோசித்து, திட்டமிட்டு, சில காரியங்களைச் செய்து வந்தார்கள். பிரதம மந்திரியினிடத்தில் பர்ஸனல் அஸிஸ்டென்டாக இருந்த மத்தாய் அவர்களுக்கு 'கனகக்குன்று பாலஸ்-ஸில்'லிருந்து வைத்து, செங்கோட்டைத் தாலுகாவை மாத்திரம் எப்படிப் பிரிப்பது என்று திட்டமிட்டார்கள். அகில இந்திய ரீதியில், ராஜ்யப் புனரமைப்பு நேரத்தில் ஒரு தாலுகாவை இரண்டாகப் பிரித்த தாலுகா எது என்றால், அது செங்கோட்டை தாலுகா ஒன்றுதான். அது மிகப் பெரும் பகுதியில் தமிழர்கள் வாழும் பகுதி. அந்தத் தாலுகாவைப் பிரிக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் பிரத்தியேகமாக நடவடிக்கை எடுத்து, அதற்காக யார் யாரை அணுகவேண்டுமோ அவர்களை அணுகினார்கள். நாங்கள் இந்தச் சபையில் இருக்கும் குறிப்பாக இரண்டு அங்கத்தினர்கள், நானும் திரு. நேசமணி அவர்களும்—இதை உணர்ந்து சுமார் மார்ச் 1956-இல் கனம் நிதி அமைச்சர் அவர்களையும் முக்கிய மந்திரி அவர்களையும் கண்டு, செங்கோட்டைத் தாலுகாவை இப்படிப் பிரிப்பதற்குத் திட்டம் இருக்கிறது, அப்படிச் செய்யக்கூடாது என்பதை எடுத்துச் சொன்னோம்.

24th February 1961] [Sri K. Sattanatha Karayalar]

ஒரு அங்குல 'மாப்' மிகக் கஷ்டப்பட்டு நாங்கள் தயார் செய்து, எந்த முறையில் அவர்கள் பிரிக்க நினைக்கிறார்கள், வாட்டர் ஷெட் லைனை டிவைடிங் லைனாக வைத்து எப்படிப் பிரிக்கவேண்டும் என்ற முழு விவரமும் கொடுத்தோம். ஆனால், நாங்கள் கொண்டுவந்து கொடுத்த தஸ்தாவேஜ் எங்கு போயிற்றோ தெரியாது. பிறகு, ஒரு ஆண்டுக்குப் பிறகு ராஜ்யப் புனரமைப்பு ஏற்படக்கூடிய நேரத்தில், அதே வட்டாரத்தில் இருக்கும் டிஸ்டிரிக்ட் கலெக்டரும், இதர அதிகாரிகளும், "ஒரு அங்குல மாப் கூட கிடைக்கவில்லை," என்று அங்கலாய்த்தார்கள். வாட்டர் ஷெட் லைனை வைத்து நிச்சயப்படுத்தப் போகிறார்களா இல்லையா என்பது அவர்களுக்கே தெரியாத நிலைமையில் இருந்தது. இதை ஏன் குறிப்பிடுகிறேன் என்றால், எந்த அளவுக்கு அந்தப் பிரச்னை வருவதற்கு முன், முன்கூட்டியே யோசிக்காமல் அதைக் காலம் தாழ்த்தி, கடைசியில், 'இம்மாதிரி நடக்கும் என்று எங்களுக்கே தெரியாது, கலெக்டர் தவறுதலாக இப்படிச் செய்துவிட்டார்' என்று சொல்லும் அளவுக்கு வந்துவிடுகிறார்கள் என்பதைத்தான் நான் வருத்தத்துடன் சொல்ல விரும்புகிறேன்.

அதுபோல், இந்தப் பிரச்னையிலும் பின்பு யோசிப்போம் என்று இல்லாமல் இப்போதே செய்யவேண்டும். ஏற்கனவேயே அதிகக் காலம் தாழ்ந்துவிட்டது. இது ஒரு மிகப் பெரிய பிரச்னை இல்லை. பம்பாய் மாகாணம் நம்மைவிட சர்வதேச ரீதியில் மிக முக்கியத்துவம் வாய்ந்திருந்தும், பம்பாய் என்ற பெயரை வைத்துக்கொண்டிராமல் மகாராஷ்டிரா, குஜராத் என்று பெயரை மாற்றிக்கொள்ள முடியுமென்றால், சென்னை மாகாணத்திற்கு 'மதராஸ்' என்ற பெயர்தான் அகில உலகத்திலே இடம் பெற்றிருக்கிறது என்று சொல்வது எந்தவிதத்திலும் பொருத்தமாக இருக்காது. தமிழனுடைய தன்மான உணர்ச்சியைப் பாதிக்கக்கூடிய எந்தக் காரியமும் செய்யக்கூடாது. தமிழனுடைய தன்மான உணர்ச்சியோடு சம்பந்தப்பட்டிருக்கக்கூடிய பெயராகிய 'தமிழகம்', அல்லது 'தமிழ்நாடு' என்று இந்த ராஜ்யத்திற்குப் பெயர் வைப்பதை அங்கீகரிப்பதில் எந்தவிதமான ஆட்சேபணையும் இருக்க நியாயம் இல்லை. இதை இன்று இல்லாவிட்டால் நாளைக்காவது மந்திரிசபை ஒத்துக்கொள்ளும் என்று எண்ணுகிறேன். அப்படி ஒத்துக்கொள்ளக்கூடிய பிரச்னையை வேண்டுமென்றே, ஏதோ அவர்கள் சொன்னார்கள், இவர்கள் சொன்னார்கள் என்ற காரணத்திற்காக வெல்லாம் தள்ளிப்போடாமல், இன்னும் அதிகக் கால தாமதம் செய்யாத முறையில், உடனடியாக அதை ஒத்துக்கொள்வது சாலச் சிறந்ததாகும். இது ஏதோ பிறர் இதற்காக ஒரு கிளர்ச்சி செய்து அதனால் நாம் ஒத்துக்கொண்டோம் என்று எண்ணுவதற்குரிய நிலைமை இந்த நாட்டில் கிடையாது. சாதாரணமாக எல்லோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய விஷயம். இனியாவது காலம் தாழ்த்தாது, மேலும் பல சக்திகள் வளர்வதற்கு இடம் கொடுக்காது, உடனடியாக மெட்ராஸ் என்பதற்குத் தமிழகம், தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்கு இத்தீர்மானத்தை அங்கீகரிக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

[24th February 1961

* **SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் சின்னதுரை கொண்டு வந்த தீர்மானத்தை முழுமனதுடன் ஆதரிக்கின்றேன். முக்கியமாக இதில் பொது ஜனங்களுடைய அபிப்பிராயம் என்ன என்று பார்ப்போமானுல் எல்லோரும் இதை ஆதரிக்கின்ருர்கள். அதேபோலத்தான் ஆளும் கட்சியில் உள்ளவர்களுமகூட எல்லா எதிர்க்கட்சியில் உள்ளவர்களையும்போல இதை ஆதரிப்பார்கள் என்று நினைக்கிறேன். ஆனுல் அவர்கள் யாரும் இதில் பங்கெடுத்துக் கொள்ளாமல் இருப்பதைப் பார்த்தால் சர்க்காரின் தீர்மானம் திட்டவட்டமாக எப்படி இருக்கும் என்று தெரியவில்லை. தவிர இரண்டு மூன்று தினத்திற்கு முன் பத்திரிகையில் படித்தேன். மந்திரி சபையில் இதைப்பற்றி விவாதித்தபோது அவர்களுக்குள்ளேயே அபிப்பிராயபேதம் இருந்ததாக. (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்டராமன் : அன்றைக்குப் பேப்பர் நிறைய விற்றிருக்கும்.—சிரிப்பு).

(Mr. Speaker in the Chair.)

பொதுவாக எதிர்க்கட்சியினர் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிருர்கள் என்பதற்காக இதை நிராகரிக்கக்கூடாது. மக்கள் அபிப்பிராயம் இது. "1952-லும் இதைப் பரிசீலித்தோம். நாங்கள் அதன் காரணமாகப் பயப்படவில்லை. 1952 தேர்தலைவிட 1957 தேர்தலில் அதிகமாக வெற்றி பெற்று வந்தோம்" என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. 1962-ல்தான் திட்டவட்டமாகத் தெரியும். ஆகவே கடைசியாகக் கேட்டுக்கொள்கிறேன், எதிர்க்கட்சியினர் கொண்டுவந்தார்கள் என்பதற்காக நிராகரிக்கக்கூடாது. இந்தப் பிரச்சனை, நீண்டநாளாக இருந்து வரும் முக்கியப் பிரச்சனை. ஆகவே மதராஸ் என்ற பெயரை மாற்றி தமிழ்நாடு என்று இந்த மாநிலத்திற்குப் பெயர் வைக்க வேண்டும் என்ற இத்தீர்மானத்தை ஆளும் கட்சியில் உள்ளவர்களும் சரி, சர்க்காரும் சரி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இன்று இங்கு இத்தீர்மானத்தின்மீது நடைபெற்ற விவாதத்திற்குப் பதில் அளிக்கும் முன் 30-ந் தேதி அன்று நடந்த நிகழ்ச்சியைப் பற்றி சில கருத்துக்கள் சொல்ல வேண்டியது அவசியம். ஏனெனில் 30-ந் தேதி அன்று இந்தத் தீர்மானம் இங்கே வந்தபோது அப்போது இருக்கக்கூடிய சூழ்நிலையில் இந்தத் தீர்மானத்தை இங்கு விவாதிக்கக்கூடாது என்ற ஒரு யோசனையை நான் சொன்னேன். அந்த யோசனையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் இந்தச் சபையைக் கேட்டுக்கொண்டேன். அதன் காரணமாக எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லோருமே வெளியில் சென்றுவிட்டார்கள். வெளியில் சென்றதோடு மட்டும் அல்லாமல் ஒரு அறிக்கையையும் கொடுத்து இருந்தார்கள். அதையும் நான் பார்த்தேன். அதிலே முக்கியமாக அன்றைக்குச் சொன்னது, பிஸினஸ் அட்வைசரி கமிட்டியில் முடிவானது, அந்த முடிவுக்கு மீறி விவாதத்தை ஒத்திப்போடவேண்டுமென்று சொன்னதை

24th February 1961] [Sri C. Subramaniam]

நான் லீடர் ஆப் த ஹவுஸ் என்ற முறையில் செய்தது தவறு என்று வலியுறுத்தினர்கள். அன்றைக்கு பிஸினஸ் அட்வைசரி கமிட்டியின் முடிவுக்கு மாருக என்ன காரணத்தினுல் சொல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது என்பதை அங்கத்தினர்கள் எல் லோரும் அறிவார்கள். நான் அந்த யோசனையை வெளியிட்ட காலத்தில் 30-ந் தேதி கிளர்ச்சி நடைபெறுவதாக இருந்தது. ஆனுல் பிஸினஸ் அட்வைசரி கமிட்டி முடிவு செய்தபோது அத் தகைய கிளர்ச்சி எதுவும் நடைபெறப்போவதாக அறிவிக்கப்பட வில்லை. அந்த நிகழ்ச்சி மட்டும் அல்ல, எந்த முறையில் என்ன நடக்கும் என்று நமக்குத் தெரியாது. ஆனுல் 30-ந் தேதி கிளர்ச்சி காரணமாகத் தொண்டர்கள் உணர்ச்சிவசப்பட்டு இருக்கலாம். அதைப்பற்றி இப்போது நான் ஆராயப் புகவில்லை. ஆனுல் சாலை மத்தியில் தொண்டர்கள் படுத்துக்கொண்டு, கார் போகாத முறையில், அங்கத்தினர்கள் உள்ளே வரமுடியாத முறையில் அந்தக் கிளர்ச்சி நடைபெற்றது என்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். ஆகவே மாறுபட்ட சூழ்நிலையில் முன்பு எடுத்து இருந்த முடிவுக்கு மாருக ஒத்திப்போடவேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டேன். விதிக்குத் தவருக நான் நடந்து கொண்டிருக் கிறேனே என்ருல் இல்லை. விதியை ஒட்டித்தான் நடந்திருக்கிறது. தவருக நடந்திருப்பதாக யாரும் சொல்ல முடியாது. நான் எதேச்சாதிகாரமாக, என்னுடைய கட்சி பலத்தைக்கொண்டு நடந்துவிட்டதாக அவர்கள் சொல்கிருர்கள். ஆனுல் எப்படி நடந்தது, சட்டசபை விதி என்ன என்பதை அங்கத்தினர்களும் உணரவேண்டும், வெளியில் இருக்கிறவர்களும் உணரவேண்டு மென்ற காரணத்தினுல் இதை விளக்கவேண்டுமென்று விரும்பு கிறேன். விதி 193-ல் பிஸினஸ் அட்வைசரி கமிட்டியைப் பற்றிச் சொல்கிறது. அதாவது . . .

'193 (1) At the commencement of the House or from time to time, as the case may be, the Speaker may nominate a committee called the 'Business Advisory Committee' consisting of not more than fifteen members including the Speaker who shall be the Chairman of the Committee.'

'195 (1) It shall be the function of the Committee, to recommend the time that should be allocated for the discussion of the stage or stages of such Government Bills as the Speaker, in consultation with the Leader of the House, may refer to the Committee

(2) The Committee shall have the power to indicate in the proposed time-table the different hours at which the various stages of the Bill shall be completed.

(3) The Committee shall have such other functions as may be assigned to it by the Speaker from time to time.'

இந்தமாதிரி என்ன, என்ன விஷயங்களைப்பற்றி சபை விவாதித்து முடிவு செய்யவேண்டும் என்பதை பிஸினஸ் அட்வைசரி கமிட்டி தீர்மானித்து சபை முன்பும் வைத்து அனுமதி பெறப்படுகிறது.

விதி 199-ஐயும் கனம் அங்கத்தினர்கள் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்விதியில் . .

[Sri C. Subramaniam] [24th February 1961

' **199.** No variation in the order shall be made except on the request of the Leader of the House with the permission of the House.'

ஆகையால் பிஸினஸ் அட்வைசரி கமிட்டியில் முடிவு எடுத்து சபையும் ஏகமனதாக ஏற்றுக்கொண்டிருந்தாலும் அதை சபையின் அனுமதியோடு மாற்ற லீடர் ஆப் த ஹவுசுக்கு இங்கே உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. லீடர் ஆப் த ஹவுஸ் ஒருவருக்குத்தான் அந்த உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல விரும்புகிறேன். தவறான சூழ்நிலை அன்று நிலவிய காரணத்தினால் அதுபற்றி இன்று விவாதிக்கவேண்டாம் என்று சபையின் அனுமதியை நான் கோரியது சட்டசபை விதிகளின்படி எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள உரிமையின் அடிப்படையிலே அமைந்திருக்கிறதே தவிர நான் ஏதோ எதேச்சாதிகாரமாகச் செய்தேன் என்று சொன்னால் அது முற்றிலும் தவறானது ஆகும்.

12–00 noon. இங்கு நான் நடந்துகொண்டது எதேச்சாதிகாரம் என்று சொன்னால் இதுவரை நான் நடந்துகொண்டு வந்தது குறித்து ஓரளவு பெருமைப்படலாம். நான் செய்தது எதேச்சாதிகார முறையில் என்று வெளியேறியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். உண்மையில் அப்படி வெளியேறினது என் எதேச்சாதிகாரத்திற்காக அல்ல. கம்யூனிஸ்ட் கட்சியினர் இப்படி ஏதாவது நெருக்கடி ஏற்படும்போது எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று பார்த்தோம். மற்றவர்கள் சிந்தித்துப் பார்க்கக்கூட இடம் கொடுக்காமல் "வாருங்கள், வெளியே போகலாம்" என்று சொல்லி வெளியேறினார்கள்.

SRI M. KALYANASUNDARAM : இது மற்றவர்களையும் அவமதிப்பதாகும். கம்யூனிஸ்ட் கட்சி மட்டும் அல்ல, எல்லோரும் கலந்து முடிவு எடுத்த தீர்மானம். கம்யூனிஸ்ட் கட்சிக்கும் மற்ற கட்சிகளுக்கும் இடையே பிளவு உண்டாக்க நினைக்கும் நிதி அமைச்சர் அவர்களின் சாதுர்யத்தைக் கண்டு எதிர்க்கட்சிக்காரர்கள் ஏமாற மாட்டார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எப்படி ஏமாற்றுவது என்ற வித்தை கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களுக்கு நன்கு தெரிந்திருக்கிறது என்பதைத்தான் சொல்ல விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : "ஏமாற்றுவது" என்ற வார்த்தை பார்லிமெண்டரியா? இந்த சபையில், இந்தக் கட்சி என்று சொன்னால் அது இங்குள்ள அங்கத்தினர்களைக் குறிப்பிடுவதாகும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கம்யூனிஸ்ட் கட்சி உள்ளேயிருந்தாலும் சரி, அல்லது வெளியே இருந்தாலும் சரி மக்களை எப்படி ஏமாற்றி தப்பான வழியில் கொண்டு செல்ல முடியும் என்பதை ஒரு சித்தாந்தமாகவே வகுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதை நான் எங்கு வேண்டுமானாலும் சொல்லத் தயார். அதை நிரூபிக்கவும் தயார். இதுபற்றி யோசித்துக்கூடப் பார்க்காமல் எதிர்க் கட்சியினர் வெளியேறும் நிலை ஏற்பட்டது. இது என் கருத்து, இது தவறாக இருக்கலாம். இன்னொன்று சொல்ல

24th February 1961] [Sri C. Subramaniam]

விரும்புகிறேன். பிஸினஸ் அட்வைசரி கமிட்டியைக் கலந்துதான் மாற்றியிருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கலாம். அப்படி செய் திருக்கலாம். நான் செய்தது வேண்டுமானல் தவறு என்று ஒப்புக் கொள்கிறேன். ஆனல் ஒன்று. இது பிஸினஸ் அட்வைசரி கமிட்டி முடிவு செய்தது, ஆகவே மேலும் அந்தக் கமிட்டியைக் கூட்டித் தான் முடிவு செய்யவேண்டுமென்று அன்று யாராவது ஒருவர் சொல்லி அதை நான் கேட்காமல் இருந்தால் அப்பொழுது என்னைக் குற்றம். . . .

SRI M. KALYANASUNDARAM : ஒரு மணி நேரம் ஒத்திப் போடலாம் என்று திரு. சின்னதுரை அவர்கள் சொன்னர்கள்.

MR. SPEAKER : பதில் அளிக்கும்போது குறுக்கே பேச முடியாது. "பாயின்ட் ஆப் ஆர்டர்" அல்லது "பாயின்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ்ப்ளனேஷன்" என்றல் குறுக்கே பேசலாம். எப்பொழுது வேண்டுமானலும் குறுக்கே பேசலாம் என்றல் ஆர்டர் இல்லாது "டிஸ் ஆர்டராக" போய் விடும். தயவுசெய்து குறுக்கிடாதீர்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : பிஸினஸ் அட்வைசரி கமிட்டியைக் கலந்து முடிவு செய்வது முக்கியம் என்று ஒருவ ராவது சொன்னர்களா? பிஸினஸ் அட்வைசரி கமிட்டி முடிவு செய்ததை மறந்து விடாதீர்கள், மீண்டும் அவர்களைக் கலக்க வேண்டும் என்று என்னை ஞாபகப்படுத்தியிருக்கலாம். அப்படிச் செய்யாது, வெளியே போன பிற்பாடு எப்படி சப்பைக்கட்டு கட்ட லாம் என்னென்ன தவறுகளை நிதியமைச்சர் அவர்கள் மீது போடலாம் என்று யோசித்து வெளியிட்ட அறிக்கையே தவிர அதை வேறு விதத்தில் எடுத்துக் கொள்வதற்கில்லை. அன்று நான் நடந்து கொண்டது விதிக்கு உட்பட்டுத்தான், விதிக்கு புறம்பாக ஒன்றும் நடக்கவில்லை. விதிகளை மீறி எந்தவிதமான நட வடிக்கையும் எடுக்கவில்லை. அப்படி எதேச்சாதிகாரமான முறையில் நான் நடந்து கொள்ளவும் இல்லை. அடுத்தபடியாக, மெஜாரிட்டி இருக்கிறது, ஆகவே அதைக் கொண்டு எந்த முடிவை யும் நீங்கள் செய்து விடுகிறீர்கள் என்று அடிக்கடி சொல்கி ருர்கள். பின், எப்படிச் செய்வது? மெஜாரிட்டியினரின் அபிப்பிராயத்தைக் கேட்காமல் சிறுபான்மையோரின் அபிப்பிரா யத்தை வைத்துக்கொண்டு, அவர்களுக்கு மட்டும் மதிப்பு கொடுத்து, அவர்கள் சொல்கிற முடிவு போல் செய்வது என்றல் அது டெமாக்ரஸி என்ற பெயருக்கோ அல்லது அமைப்பிற்கோ பொருத்தமில்லாது, அதற்கு வேறு அர்த்தம்தான் கொடுக்க வேண்டியிருக்கும். சிறுபான்மையோர் என்று சொல்லும்போது, அவர்கள் கருத்திற்கு மதிப்பு கொடுக்கவேண்டும் என்று சொல் லும்போது நாம் ஒன்றை திட்டவட்டமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். பின்னும் இதுபற்றி நாம் கவனிக்கவேண்டியவர் களாயிருக்கிறேம். நாம் எடுக்கும் நடவடிக்கைகள் காரண மாக, மொழி சிறுபான்மையோருக்கு அவர்கள் உணர்ச்சிகளுக்கு, அல்லது வேறு விதத்தில் அவர்களுக்கு இடையூறுகள் அல்லது சங்கடங்கள் ஏற்படுமானல் நாம் பெருவாரியாக இருந்தாலும்,

[Sri C. Subramaniam] [24th February 1961

அவர்கள் சிறுபான்மையோரானதால் இது நாம் கவனிக்க வேண்டிய விஷயம். அப்பொழுது அவர்களின் உணர்ச்சி எப்படி யிருக்கிறது என்பதை நாம் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோம். அதேபோல் சமய அடிப்படையில் சிறுபான்மை யோராயிருக்கலாம். அப்பொழுது அவர்கள் சமயத்தைத் தாக்கும் முறையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால், நாம் மெஜா ரிட்டியினராயிருக்கிறோம், ஆகவே எங்கள் பலத்தை வைத்துக் கொண்டு ஒரு முடிவு எடுப்போம் என்ற முறையில் சொன்னால் அப்பொழுது வருகிறது, சிறுபான்மையோரின் உரிமை. ஆனால் எங்களுக்கு மக்களின் ஆதரவு கிடைக்கவில்லை, நாங்கள் 15, 17 பேர்கள்தான் வந்திருக்கிறோம், 4 பேர்கள், 5 பேர்கள்தான் இருக் கிறோம், ஆகவே நாங்கள் சொல்லும் கருத்துக்களைக் கவனித்து எங்களுக்கு மதிப்பு கொடுக்கவேண்டுமென்று சொல்லும்போது, அதை ஒவ்வொருபிடத்திலும் வலியுறுத்துவது என்றால் ஜன நாயக அடிப்படைக்கு அது உகந்ததல்ல. இதைச் சற்று சிந்தனை செய்து பார்க்கவேண்டுமென்று திரு. ராமசுவாமி முதலியார் அவர் களையும், திரு. கல்யாணசுந்தரம் அவர்களையும், மற்றவர்களையும் நான் கேட்டுக்கொள்கிறேன். மெஜாரிட்டி, மெஜாரிட்டி என்று சொன்னால், கடைசியாகப் பார்க்கும்போது அந்த அடிப்படையில் தான் இங்கு அரசாங்க நிர்வாகத்தை நடத்த முடியுமே தவிர எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் சிறிய எண்ணிக்கையில் இருக்கி றார்கள், ஆகவே அவர்கள் சொல்வதற்குத்தான் அதிக மதிப்பு கொடுக்கவேண்டும் என்ற முறையில் நாம் முடிவு எடுக்கவேண்டு மென்று சொன்னால் அது ஜனநாயகத்திற்கு ஏற்றதல்ல, அந்த அமைப்பிற்கு உகந்ததல்ல என்று எடுத்துக் கூற விரும்புகிறேன். ஆகவே, இன்று இத்தீர்மானத்தைப்பற்றிப் பரிசிலனை செய்யும் போது, இவைகளையெல்லாம் ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டு பெயர் மாற்றுவது அவசியந்தானா என்பதுபற்றி ஆராயவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று காங்கிரஸ் கட்சியில் உள்ளவர்களைத் தவிர எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் அனைவரும் அவர்கள் கருத்துக்களைத் தெரிவித்து விட்டார்கள். இதிலிருந்து, தமிழ் என்று சொன்னால், எதிர்க்கட்சிக்காரர்களுக்குத்தான் தமிழில் அக்கரை போலிருக்கிறது, தமிழர்களிடம் அவர்களுக்குத் தான் அக்கரை போலிருக்கிறது, என்று நினைக்கக்கூடிய முறையில் இந்தப் பெயர் வைப்பது குறித்து யாரும் முடிவு செய்யமாட் டார்கள் என்ற பூர்ண நம்பிக்கை எனக்கிருக்கிறது. யாரும் இது குறித்து ஐயப்பட மாட்டார்கள். ஏனெனில், தமிழர்களின் நல் வாழ்விற்காக, தமிழ் மொழி வளர்ச்சிக்காக இன்று நாம் எடுத் திருக்கக்கூடிய நடவடிக்கைகளின் அடிப்படையில், நாங்கள் எடுத் துக்கொண்டுள்ள முயற்சிகள் அடிப்படையில், இந்த மந்திரிசபை எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய முயற்சிகள் அடிப்படையில் இதை நம்பலாம். நாங்கள் செய்ததை இன்னும் சிறிது திறமையாகச் செய் திருக்கலாம் என்று சொன்னால் அதை ஒப்புக்கொள்ளத் தயார். ஆனால் தமிழர்கள் வாழ வேண்டும் என்பதற்காக, தமிழ் வளர வேண்டும் என்பதற்காக வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும், தீவிர முயற்சி செய்யவேண்டும் என்ற எண்ணம் எங்க ளுக்கு இல்லையென்ற முறையில் யாராவது பேசினால், அதை மக்க

24th February 1961] [Sri C. Subramaniam]

ளிடம் சொல்லி அவர்களை நம்ப வைப்பது என்பது கஷ்டம். இந்த வார்த்தையை யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். தமிழர் களின் தன்மானத்தைக் காக்க என்று சொன்னால் தன்மானம் உள்ளவர்களா இல்லையா என்பது வெறும் பெயரில் அல்ல இருப் பது என்பது என் கருத்து. திரு. அன்பழகன் அவர்கள் குறிப் பிட்டது பற்றிச் சொல்கிறேன். தமிழ் பாடமொழியாகவேண்டு மென்று சொன்னபோது கருத்து வேற்றுமை இருப்பதாகச் சொன்னார்கள். அவர்கள் ஏடுகளிடையேயே இதுபற்றி கருத்து வேற்றுமையில்லையா? இதை எதிர்த்தே அவர்கள் ஏடுகள் இருப்பது பற்றி அவர்களுக்கு நான் எடுத்துக் காட்ட வில்லையா? இது போன்ற விஷயங்களில் கருத்து வேறுபாடு இருப்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை--சில சமயங்களில் பத்திரிகை களில்கூட ஒரு பத்திரிகை "மந்திரிசபைக்குள் பிளவு" என்று கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்தது. இது பற்றி மூன்று நான்கு மாதங்களுக்குள் மூன்று தடவை இதுபற்றி அப்பத்திரிகையில் வந்து விட்டது. மந்திரிசபைக்குள் பிளவு ஏற்படவேண்டுமென்ற அவர்கள் ஆசை காரணமாக அப்படி போட்டுக்கொண்டு வருகிறார்கள். "மந்திரிசபைக்குள் பிளவு" என்று கொட்டை கொட்டையாக வெளியே போட்டு, உள்ளே பார்த்தால் அதன் வாசகத்தில் கருத்து வேற்றுமை குறித்து ஒரு வாசகமும் காணவில்லை. மற்றயிடங்களில் மந்திரி சபைக்குள்ளும், கட்சிகளுக்குள்ளும் பிளவு இருக்கிறதே, ஏன் நம் ராஜ்யத்தில் மட்டும் அப்படியில்லை, அதற்காக நாம் ஏதாவது உதவி செய்ய முடியுமா என்று பார்க்கக்கூடிய முறையில் அவர்கள் அதற்கு உதவி செய்ய வருவதுபோல் இருக்கிறது. அப்படிப் பிளவு இல்லையே என்று அவர்களுக்கு கஷ்டமாயிருக்கிறது. ஆகவே, பத்திரிகை நடத்துகிறவர்களுக்கு ஒரு பொறுப்பு இருக்கிறது. உடன்பாட்டை வளர்ப்பதற்கு, ஒற்றுமையை வளர்ப்பதற்கு பத்திரி கைகள் பாடுபட கடமைப் பட்டிருக்கின்றன. ஒற்றுமைக்குப் பதிலாக, பிரிப்பதற்கான முறையில் போடுவதை நிறுத்துவது மிக அவசியம். தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் தமிழர்கள் பண்பைக் காட்டுகிறார்கள், தமிழர்கள் பண்பு குறைந்துவிடவில்லை என்ற முறையில் பத்திரிகைகள் பணியாற்றினால், தமிழ்நாடு என்று பெயர் வைப்பதைவிட அதிகமான நன்மை ஏற்படும். நமது பண்பு குறைந்து விடக்கூடாது.

Sri A. V. P. ASAITHAMBI : Sir, on a point of personal explanation.

Mr. SPEAKER : நீங்கள்தான் ஒன்றும் பேசவில்லையே, எப்படி இப்போது நீங்கள் பேச முடியும்?

Sri A. V. P. ASAITHAMBI : அமைச்சர் அவர்கள் குறிப் பிட்ட பத்திரிகை என்னைப்பற்றியதுதான், (பலத்த சிரிப்பு) கனம் அமைச்சர் அவர்கள் தமிழரசுக் கழகத் தலைவர் அவர்களுக்கு அனுப்பிய கடிதத்தில், 'நாங்கள் கொண்டிருக்கிற கருத்தை சபைக்கு வெளியில் சொல்லுவதற்கில்லை, சபையில்தான் அதை தெரிவிக்க முடியும்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த

நிலையில் முதல் அமைச்சர் அவர்களுடைய கருத்துக்கு இது வேறுபாடாக இருந்த காரணத்தின் பேரில் அவர்களுக்குள்ளேயே கருத்து வேறுபாடு இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டியிருந்தேன். அதை இப்போது சொல்லுவது, சபையையும் சபையில் இருக்கின்ற என்னையும் பாதிப்பதாக இருப்பதால், நான் எடுத்துக் கூறியிருந்ததை வேறுமாதிரியாக பயன்படுத்திக் கொள்ளவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் குல்லாய் வேறு யாருக்காவது பொருந்தும் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் இந்தக் குல்லாய் திரு. ஆசைத்தம்பி அவர்களுடையதுதான் என்று அவர்களே எடுத்துப் போட்டுக்கொண்டார்கள். (சிரிப்பு) திரு. ஆசைத்தம்பியைப்பற்றியோ அல்லது அவர்களுடைய பத்திரிகையைப்பற்றியோ என் மனதில் எந்தவிதமான எண்ணமும் வரவில்லை. இப்போது அவர்களே அதைப் போட்டுக்கொண்டார்கள். எந்தப் பத்திரிகையில் இது வந்திருந்தது என்பது அவர்களுக்கே தெரியும். அவர்கள் இப்போது வந்து இங்கு சமாதானம் சொல்ல வேண்டிய அவசியமில்லை. திரு. ஆசைத்தம்பி அவர்களுடைய பத்திரிகையில் வந்திருந்ததோ என்னவோ தெரியவில்லை, அதை நான் பார்க்கவில்லை, மற்றவர்கள் பார்த்திருந்தாலும் பார்த்திருப்பார்கள். ஆகவே, இந்த முறையில் யாரும் மந்திரிசபைக்குத் தொண்டு செய்யவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொரு கேள்வியும் இங்கு கேட்கப்பட்டது. 'உங்களுக்கு தமிழ்நாடு என்று பெயர் வைத்து விட்டால் என்ன வந்து விடப் போகிறது, ஏன் வெட்கப்படுகின்றீர்கள், உங்களுக்கு என்ன அவமானம் வந்து விடும்?' என்று பலர் இங்கு கேட்டார்கள். அப்படி வெட்கக்கேடு ஏற்பட்டு விடும், அல்லது அவமானம் வந்து விடும் என்று எண்ணியிருந்தால் எப்படி தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி என்று பெயர் வைத்திருக்க முடியும்? இதில் வெட்கப்படுவதற்கு என்ன இருக்கிறது? அப்படியானால் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி என்று பெயர் வைக்கவேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காது, அதை மாற்றுவதற்கான சந்தர்ப்பங்கள் எவ்வளவோ இருந்தன. அப்படியிருந்தும் கூட இப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி என்றுதான் வைத்துக்கொண்டிருக்கின்றோம். தமிழ்நாடு என்றால் காங்கிரஸ்காரர்களுக்கு வெறுப்பு அல்லது அதன் பேரில் காங்கிரஸ்காரர்களுக்கு விரோதம் என்கின்ற அடிப்படையில் எண்ணுவதற்கு அவசியமே கிடையாது. தமிழர்களுடைய வளர்ச்சியாக இருந்தாலும் சரி, தமிழ் மொழியினுடைய வளர்ச்சியாக இருந்தாலும் சரி, தமிழர்களுடைய முன்னேற்றமாய் இருந்தாலும் சரி, தமிழ் மொழியினுடைய முன்னேற்றமாய் இருந்தாலும் சரி காங்கிரஸ்காரர்கள் என்றுமே தயங்கியிருந்ததில்லை. அவ்வாறு இருக்கும் போது இப்போது திடீரென்று இந்த ராஜ்யத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர் வைக்கவேண்டிய அவசியமில்லை என்று சொல்லுகிறோம் என்றால், அதற்கு ஏதாவது காரணம் இருக்கத்தான் செய்யும் என்பதை எல்லோரும் யோசித்துப்பார்க்க வேண்டும். இதை ஏதோ தேர்தலுக்காக உபயோகப்படுத்து

24th February 1961] [Sri C. Subramaniam]

கிறோம் என்றும் இப்போது இல்லையென்றால் தேர்தல் வரை இந்தப் பெயரை வைக்கக்கூடாது என்றெல்லாம் கனம் திரு. அன்பழகன் அவர்கள் பாடம் சொன்னார்கள். அவர்கள் பாடத்தை நாம் கேட்க வேண்டியதுதான், ஆசிரியர் பாடம் சொல்லும்போது எப்படிப் பாடம் கேட்காமல் இருக்க முடியும்? இதை வைத்துக்கொண்டு மக்களிடத்தில் போய் வோட்டுக்கேட்க வேண்டும் என்ற எண்ண மிருந்தால் தான் இதைப்பற்றி நாம் தேர்தலோடு சம்பந்தப் படுத்திப் பார்க்கவேண்டும். பெயரை மட்டும் வைத்துக்கொண்டு மக்களிடத்தில் போய் வோட்டுக் கேட்கலாம் என்று நம்பிக்கை வைத்துக் கொண்டிருந்தால் அது வெறும் அவநம்பிக்கையாகி விடும், அவ்விதம் யாராவது கனவு கண்டு கொண்டிருந்தால் அது வெறும் பகற்கனவு தான், அதிலிருந்து விழித்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த அடிப்படையில் இந்தப் பிரச்னை தேர்தலுக்குச் சாதகமாக இருக்குமா அல்லது பாதகமாக இருக்குமா என்பதை நாம் கூர்ந்து பார்க்கவில்லை. ஆகையினால் தான் இன்றைக்கு இதைப்பற்றி நன்றாக ஆலோ சித்துப் பார்த்து இதில் முடிவு செய்ய வேண்டியவர்களாக இருக் கிறோம். மதராஸ் என்றிருப்பதை மாற்றுவதால் ஏதாவது நன்மை கிடைக்குமா அல்லது வேறு ஏதாவது பாதகம் ஏற்படுமா என்பதைப் பற்றியும் நாம் கூர்ந்து பார்க்கவேண்டியதாக இருக் கிறது. கனம் அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் சொன்னது போல் மகாராஷ்டிரம் என்று வெளிநாடுகளில் சொல்லும்போது அது எங்கே இருக்கிறது என்று கேட்க வேண்டிய நிலை ஏற்படு கிறது. வேண்டுமென்றால் இன்னும் நாலைந்து ஆண்டுகளுக்குப் பின்னால் வெளிநாடுகளில் தெரிந்து கொள்ள முடியும். அப்படிப் பார்க்கும்போது உலகத்திற்கு எல்லாம் தெரியக் கூடிய அளவில் இருக்கக்கூடிய மதராஸ் என்ற பெயரை மாற்ற வேண்டியதன் அவசியம் என்ன என்பதையும் நாம் ஆலோசனை செய்து பார்க்க வேண்டியதாக இருக்கிறது. இவ்விதம் இருந்து கொண்டு இருப்ப தால் நமக்கு எந்தவிதமான அவமானமும் இல்லை. இதனால் நம்முடைய தன்மானத்திற்கும் எந்தவிதமான தீங்கும் வந்து விடாது. இன்றைக்கு மதராஸ் என்றிருப்பதை தமிழ்நாடு என்று மாற்றிவிட்டாலும் கூட இதைப்பற்றி ஜெர்மனியிலோ அல்லது அமெரிக்காவிலோ கேட்கும்போது தமிழ் என்பது அவர் களுடைய பழமையான மொழி, அது மிகவும் வளமடைந்த மொழி, இதன் அடிப்படையில் தான் தமிழ்நாடு என்று பெயர் வைக்கப்பட் டிருக்கிறது என்று கருதமாட்டார்கள்; முன்பு மெட்ராஸ் என்று இருந்ததைத்தான் இப்போது தமிழ்நாடு என்று மாற்றியிருக் கிறார்கள், இரண்டும் ஒன்றுதான் என்று எடுத்துக்கொள்வார்கள், பல பெயர்கள் அதனுடைய காரணம் தெரியாமலேயே நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். விக்டோரியா ஆஸ்டல் இருக் கிறது. நான் அதில் தங்கியிருந்திருக்கிறேன். அந்தப் பெயர் எப்படி வந்தது என்று அப்போது எனக்குத் தெரியாது. ஏதோ ஆஸ்டல் விழா கொண்டாடும்போது தான் விக்டோரியா மகாராணி யாரின் பெயரில் இந்த ஆஸ்டல் நிறுவப்பட்டது என்ற நினைப்பு வருகிறது, அதன் பின்னால் அந்த எண்ணம் தோன்றுவதில்லை ஒரு

[Sri C. Subramaniam] [24th February 1961

பெயரை மட்டும் வைத்துக்கொண்டு அந்த நாட்டு மக்களின் பண்பு என்ன, அந்த நாட்டிலுள்ள சிறப்பு என்ன, அந்த நாடு வளம் பெற்றிருக்கிறதா இல்லேயா என்பதைப்பற்றி எல்லாம் வைத்துக் கொள்ள முடியாது. அதற்காக யாரும் முயற்சியும் செய்ய மாட்டார்கள். உலகத்தில் மதராஸ் என்று சொல்லும்போது என்ன நன்மை கிடைக்கிறது, தமிழ்நாடு என்று சொல்லுவதால் என்ன தீமை ஏற்பட்டுவிடும் என்று பலர் பல கேள்விகளைக் கேட்டார்கள். அதேசமயத்தில் உலகத்தில் நம்மைப்பற்றி நம் நாட்டைப்பற்றி மதராஸ் என்று தெரிந்திருக்கும்போது ஏன் அதைக் கைவிட வேண்டும் என்பதையும் நாம் யோசிக்க கடமைப்பட்டிருக்கிறோம். இங்கு கனம் அங்கத்தினர் திரு. ஆதிமூலம் அவர்கள் பேசினார்கள், எனக்கு அதைக்கேட்டு தூக்கிவாரி போட்டது. இங்கு எல்லாம் பச்சைத் தமிழ் மந்திரிகள் இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். இம்மாதிரியான உணர்ச்சிதான் வந்து விடுமோ என்று நான் பயப்படுகிறேன். தமிழுக்குத்தான் முதல் இடம், மற்றவைகளுக்கு எல்லாம் பின்னால் தான் இடம் என்கின்ற அளவில், தெலுங்கு பேசக்கூடிய நாயுடுகளுக்கும், ரெட்டியார்களுக்கும், தெலுங்கு பேசக்கூடிய ஆதித்திராவிட மக்களுக்கும், அதேபோன்றுதான் கன்னடம் பேசக்கூடியவர்களுக்கும், மலேயாளம் பேசக்கூடிய மலே யாளிகளுக்கும் இங்கு இடம் கிடையாது என்கின்ற அளவில், அந்த அடிப்படையில், நம் நாடு அல்லது நம் சர்க்கார் இயங்க வேண்டும் என்று சொன்னால் அது முடியாத காரியம் என்று தான் சொல்ல வேண்டும். தெலுங்கு பேசக்கூடியவர்கள் இந்த நாட்டில் இருக்கக் கூடாது, அல்லது மலேயாளம் பேசக்கூடியவர்கள் இந்த நாட்டில் இருக்கக் கூடாது என்ற அடிப்படையில் நாம் இயங்க முடியாது. அமைச்சர்களை முதல் மந்திரி தேர்ந்தெடுக்கிறார்கள். அவர்கள் தேர்ந்தெடுப்பது எந்தெந்த மொழி என்று பார்த்து தேர்ந்தெடுப்ப தில்லை; யாரைத் தேர்ந்தெடுத்தால் காரியங்கள் நல்லபடியாக நடை பெறும் என்பதைப் பார்த்து அதற்குத் தகுந்தபடி தேர்ந்தெடுக் கிறார்கள். அதல்லாமல் மொழியை வைத்துக்கொண்டு தேர்ந் தெடுப்பதில்லை. ஏதோ அவர்கள் தேர்ந்தெடுத்த பின்னால் தான் இவ்விதம் அமைந்திருப்பதாகவே தெரியும் என்று கூட முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆகவே இவ்விதம் இருக்கக்கூடிய மொழிப்பற்றை மொழி வெறியாக மாற்றிவிடக் கூடாது என்பது தான் சர்க்காருடைய நோக்கம். மொழிப் பற்று எந்த முறையில் மொழிவெறியாக மாறிவிடும் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் தான் அமைந்திருந்தது திரு. ஆதிமூலம் அவர்களின் பேச்சு என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். வேண்டு மென்றால் மிகப் படித்தவர்களிடத்தில் இந்த வெறி தோன்றாமல் இருக்கலாம், அதே சமயத்தில் நாட்டிலிருக்கக் கூடிய இளைஞர்கள் மத்தியில் இதன் காரணமாக ஒரு இழுக்கு வந்துவிடுமோ என்று நினைக்கத் தோன்றுகிறது. ஒரு மொழி பேசக்கூடியவர்கள் தான் இந்த நாட்டில் இருக்கவேண்டும், மற்ற மொழி பேசக்கூடியவர்கள் இந்த நாட்டில் இருக்கக்கூடாது என்கின்ற அடிப்படையில் நாம் செயல்படுவோமேயானால் அதனால் ஏற்படக் கூடிய பலவிதமான தீமைகளையும் நாம் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும்.

இப்போதுள்ள நிலைமையில், அதிலும் பொருளாதார மாற்றம் ஏற்பட்டுக்கொண்டுவரும் இந்த நாளில், ஒரு நாட்டில் ஒரு மொழி பேசக்கூடியவர்கள் மட்டும் தான் இருக்க முடியும் என்பது முடியாத காரியம். ஒவ்வொரு இடத்திலும், மாற்றம் வர வர, புதிய புதிய தொழில்கள் வர வர எல்லா மொழி பேசக் கூடியவர்களும் இருந்து கொண்டுதான் இருப்பார்கள் என்பதில் எந்தவிதமான சந்தேகமும் இருப்பதற் கில்லை. இதை வேண்டுமென்றால், அதிலும் தமிழ் பேசுகின்றவர் களை வேண்டுமென்றால் ஒரு இனம் என்று வைத்துக்கொள்ளட்டும், கனம் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போல், கம்யூனிஸ்டு சித்தாந்தமே வேறாகத்தான் இருக்கும். தெலுங்கு பேசுவது இன்னொரு இனம்—கன்னடம் பேசுவது இன்னொரு தனி இனம்--என்று போய்விடக் கூடாது. பல இனங்கள் சேர்ந்த ராஜ்யமாக இன்னும் சென்னை ராஜ்யம் இருந்துகொண்டிருக்கிறது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன்.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் பேசுகின்ற போது தமிழ் மொழிக்கு ஆக்கம் அளிக்கும் முறையிலே ஈடு பட்டால் தமிழ் மொழிப் பற்று நல்ல அளவில் ஏற்படும் என்று தெரிவித்து விட்டு, தமிழ் நாடு என்று பெயர் வைப்பதில் மொழிப் பற்றுக்கு பதிலாக வெறி உணர்ச்சி ஏற்படும் என்று சொல்லுவது முன் கூறியதற்கும் பின் கூறியதற்கும் முரணை இருக்கிறதல்லவா? தமிழ் நாடு என்று பெயர் வைத்தால் உணர்ச்சி ஏற்பட்டு விடும் என்று மொழிப் பற்றை அழிக்க விரும்புகிறா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : மொழிப் பற்று என்று சொல்லும்போது மொழி வளர்வதற்காக எடுக்கக் கூடிய நட வடிக்கையெல்லாம் சேர்ந்திருக்கலாம். வெறும் பெயர் வைக்க வேண்டும் என்று சொல்வது, கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்களும் மற்றவர்களும் சொன்னது போல, இது தனியாக ஒரு உணர்ச்சியை மட்டும் கொண்டது. ஆக, உணர்ச்சியைத் தனி யாகக் கொண்டிருக்கும்போது, எந்தெந்த உணர்ச்சியின் பிரதி பலிப்பாக இருக்கும் என்று பார்க்கும்போது, அந்த உணர்ச்சி அந்த மாதிரி இடத்தில் கொண்டுவிடக் கூடாது என்று வலி யுறுத்துகிறேனேயொழிய, பெயரை மாற்றக் கூடாது என்று சொல்லவில்லை. இதிலே இருக்கக் கூடிய அபாயத்தை--பேபா யத்தை—வலியுறுத்த விரும்புகிறேன். ஏனென்றால் அந்த மனப் பான்மை இருக்கும் வரையில் பெயரை மாற்றுவது நன்மை பயப்பதற்குப் பதிலாக, தன்மானம் என்று சொன்னார்களே அந்த தன்மானத்தைக் காப்பதற்குப் பதிலாக, மற்றவர்களுடைய மானத்தை அழிக்கும் வெறியாக முடியும் என்பதை மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். இதுதான் இதிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri C. Subramaniam] [24th February 1961

அடுத்தபடியாக "ஏன் தயங்குகிருர்கள், ஏன் தயங்குகிருர்கள்" என்று சொன்ஞர்கள். இதில், நான் முதலிலேயே சொன்னேன், சிறுபான்மையினரைப் பற்றி. சிறுபான்மை என்று சொல்லும் போது, மொழியினுல் சிறுபான்மையினராக இருக்கலாம், அல்லது சமயத்திஞல் சிறுபான்மையினராக இருக்கலாம். உணர்ச்சி என்று சொல்லும்போது பெருவாரியாக இருக்கக் கூடிய நம்முடைய உணர்ச்சி மட்டுமல்லாமல் மற்றவர்களுடைய உணர்ச்சிகளையும் ஒருவாறு ஊகித்தறிந்து அவர்களுடைய உணர்ச்சி ஒரு சிறிதாவது பாதிக்கப்படுமாஞல், பெருவாரியாக இருக்கக் கூடியவர்கள் கூறக் கூடிய முறையில் ஏதாவது ஒரு நடவடிக்கை எடுப்பதில் எல்லோருக்கும் பொதுவாக இருக்கக் கூடிய சர்க்கார் தயங்கித் தான் ஆகவேண்டும்.

(Sri K. Anbazhagan rose to interrupt and the Hon. Minister yielded.)

MR. SPEAKER: I am sorry, No. கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்திரம் குறுக்கிட்டபோது, 'குறுக்கிடக்கூடாது, சில கண்டிஷன்கள் இருக்கின்றன' என்று சொன்னேன். அவருக்குச் சொன்னது கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்களுக்கும் பொருந்தும். கனம் அமைச்சர் அவர்கள் இடம் கொடுத்தாலும் சபாநாயகர் இடம் கொடுக்க முடியாது. அமைச்சரும் இடம் கொடுக்கவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: Thank you, Sir. ஆகையால் இது போன்று நாம் உணர்ச்சி வசப்பட்டு, அந்த உணர்ச்சியின் காரணமாக ஏன் உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுக்கக் கூடாது என்று சொல்லும்போது, நம் உணர்ச்சிக்கு மதிப்பு கொடுப்பதற்கு முன்பாக சிறுபான்மையினரின் உணர்ச்சிக்கு அதிக மதிப்பு கொடுக்கவேண்டும். வெறி உணர்ச்சி வந்துவிடக் கூடாது என்று மனதிலே வைத்துக்கொள்ளவேண்டும். ஆகையால், இன்றைக்கு ஏன் சென்னை ராஜ்ய சர்க்கார் தயங்குகிறது, மத்திய சர்க்காரில் இருப்பவர்கள் வைத்து விட்டார்களே, மகாராஷ்டிரா என்று வைத்து விட்டார்களே, சென்னை ராஜ்யத்திற்கு தமிழ்நாடு என்று சொன்ஞல் என்ன என்று கேட்டால் தமிழ்நாடு மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறது. மொழிப் பிரச்னையாக இருந்தாலும் சரி, எல்லைப் பிரச்னையாக இருந்தாலும் சரி, பல பிரச்னைகளில் வெறியாக மாறி விடாமல் நாட்டுக்கே வழி காட்டியாக இருக்கிறது. அந்த அடிப்படையில் மொழிப் பிரச்னை தீர்க்கப்பட்டிருக்கிறது. எல்லைப் பிரச்னையிலும் கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்திரம் அவர்கள் கூட ஒப்புதல் செய்தார்கள், நாடு பிடிக்காமல் இருப்பதை வைத்து முன்னேற்றம் செய்தால் நன்ருக இருக்கும் என்று மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறோம். மற்றவர்கள் வைத்திருக்கிருர்கள், மகாராஷ்டிரா என்று வைத்திருக்கிருர்கள் என்று சொல்லிக் காட்டி நாமும் அதற்காக வைத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்வதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. மகாராஷ்டிரா என்று வைத்திருப்பது

24th February 1961] [Sri C. Subramaniam]

கூட சரியல்ல என்பது எனது சொந்த அபிப்பிராயம்—அது வேறு விஷயம். அதைச் சொல்லி அவர்கள் காட்டியிருக்கிற வழியில் போக வேண்டும் என்பது சரியல்ல. உணர்ச்சிவசப்படக் கூடிய துறையில் கூட மற்றவர்களுக்கு வழிகாட்டியாக அமைந்திருக்கிறோம் என்பதை என்றைக்கும் வைத்திருக்க வேண்டும் என்பது தான் எனது கருத்து.

ஆகையால், இன்றைக்கு இதைப் பற்றியெல்லாம் பரிசீலனை செய்து பார்த்து முடிவுக்கு வரவேண்டியிருக்கிறதேயொழிய வேறு ஒன்றுமில்லை. ஆக, தமிழ்நாடு என்று வைப்பதற்கு வெட்கப் படுவதாகவோ அல்லது வேறு காரணங்களுக்காக தயக்கப்படுவதாகவோ அல்லது எதிர் கட்சிகளுக்கு கிதாப்பு, பெருமை வந்து விடுமோ, சிறப்பு வந்து விடுமோ, அதனால் தேர்தலில் நமக்கு பாதகம் வந்து விடுமோ என்று நினைக்கக் கூடிய நிலைமை எதுவும் இல்லை என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இதையெல்லாம் பரிசீலனை செய்து பார்த்து சர்க்கார் இப்போது ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. அந்த முடிவைத்தான் நான் இந்தச் சபையின் முன்பு வைக்கவேண்டுமென்று விரும்புகிறேன். இன்றைக்கு நாம் செய்திருக்கக் கூடிய முடிவு, சொல்லக் கூடிய பல் வேறு விவாதங்களை அடிப்படையாகப் பார்த்து, அதே சமயத்தில் பல்வேறு உணர்ச்சிகளையும் அடிப்படையாக எடுத்துக்கொண்டு இன்றைக்கு சர்க்கார் செய்திருக்கக் கூடிய முடிவு என்ன என்பதைப் பற்றி சபையின் முன்பு வைக்கிறேன். அதை இந்தச் சபை ஏற்றுக்கொண்டு, இனிமேல் எந்தவிதமான கிளர்ச்சியும் இல்லாமல், இந்தக் கிளர்ச்சிகளுக்கெல்லாம் ஒரு முடிவு கட்ட வேண்டுமென்ற முறையில் சர்க்கார் எடுத்திருக்கக் கூடிய அந்த முடிவை நான் வெகு மகிழ்ச்சியுடன் இந்தச் சபையின் முன்னிலையில் வைக்கின்றேன்.

முதல் முடிவு—இன்றைக்கு இருக்கக் கூடிய முறையில் மெட்ராஸ் என்று சொல்லி வருகிறோம். நமது அரசியலமைப்பில் மெட்ராஸ் என்று இடம் பெற்றிருக்கிறது. அதை மாற்ற வேண்டிய அவசியம் இல்லை என்ற முடிவுக்கு சர்க்கார் வந்திருக்கிறது.

மெட்ராஸ் என்று சொல்லும்போது அது ஆங்கிலத்தில் இருக்கக் கூடிய பதம். தமிழில் சொல்லும்போது மெட்ராஸ் என்று அழைப்பதில்லை. நகரத்தை அழைக்கும்போது சென்னை நகரம் என்று சொல்லுகிறோம்—அது அப்படியே தான் இருக்கும்—நகரத்தின் பெயரை மாற்றவேண்டுமென்று ஒருவரும் சொல்வதாகத் தெரியவில்லை. ஆனால் மெட்ராஸ் ஸ்டேட் என்று சொல்லும்போது சென்னை ராஜ்யம் என்று சொல்லுகிறோம்—சென்னை ராஜ்ய சர்க்கார் என்று சொல்லுகிறோம். ஆங்கிலத்திற்குப் பதிலாக தமிழ் மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டுவரவேண்டும் என்று நாம் இப்போது முயற்சியெடுத்துக் கொண்டு வருகிறோம். நிர்வாகத்தில் இருக்கின்ற பல்வேறு சொற்களுக்கு ஆங்கிலப் பதத்திலிருந்து

[Sri C. Subramaniam] [24th February 1961

தமிழில் போடும்போது என்ன தமிழ்ச் சொல் என்று கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறோம்—கலைச் சொல் அகராதி என்று கூட அமைத்து வந்திருக்கிறோம். அதைப் போலவே மெட்ராஸ் ஸ்டேட் என்று குறிப்பிடுகிற இடத்தில் சென்னை ராஜ்யம் என்று எழுதுவதற்குப் பதில் **"தமிழ்நாடு"** என்று எழுதலாம் என்று பெரு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன் (பெரும் ஆரவாரம்) . . . . . . . . போகப் போக, நம் ஆட்சி மொழி மேலும் மேலும் வளரும் போது, ஆங்கிலம் மாற்றப்பட்டு தமிழே நிர்வாகத்தில் வரும் போது, மெட்ராஸ் என்று ஆங்கிலத்தில் மற்றவர்களுக்கு எழுதக் கூடிய இடத்தில் தான் குறிப்பிடப்படுமே தவிர, வேறு எல்லா இடங்களிலும் தமிழ் நாடு சட்டசபை,—தமிழ் நாட்டு சட்ட சபையா, தமிழ்நாடு சட்ட சபையா என்று ஆசிரியர்கள் தான் சொல்லவேண்டும்—தமிழ் நாடு சர்க்கார் என்று சொல்லக் கூடிய முறையில் அமைந்து விடும். இப்படி வருவதில் யாருக்கும் ஆட்சேபனை இருக்க முடியாது—எல்லோரும் வரவேற்பார்கள்—என்ற நம்பிக்கையுடன் இந்த முடிவை எடுத்திருக்கிறோம்.

ஆக, இன்றைக்கு இரண்டு பெயர்கள் இருக்கலாமா என்று பல பேருக்குச் சந்தேகம் இருக்கலாம். இன்றைக்கு ஜெர்மனியை எடுத்துக் கொள்ளுங்கள்—அடிக்கடி வெளிநாடுகளுக்குப் போய் வந்திருக்கக் கூடிய கனம் அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்களைக் கேட்டேன், நான் போயிருந்தபோது அறிந்த தகவல் சரி தானா என்று—இப்போது உலகத்தில் ஜெர்மனி என்றால் தான் தெரியும்—ஆனால் அவர்கள் சொல்லிக் கொள்வது "டூஷ்லண்ட்". அது அவர்கள் மொழியில்—அவர்களுக்குத் தெரியும். அதனால் அவர்களுக்கு ஏதாவது குறைவு வந்து விட்டதா ? இல்லை. உலகத்திலே —வெளியே—ஜெர்மனி என்று சொல்லக் கூடாது என்று அவர்கள் நடவடிக்கை எடுக்கவில்லை.

ஆக, இன்றைக்கு அந்த அடிப்படையில் வெளியில் மற்றவர்களுக்கு ஆங்கில மொழியில் எழுதும்போதும், ஆங்கிலத்தில் பேசும்போதும் மெட்ராஸ் என்று வைத்துக் கொண்டு, அதற்காக இப்போது போய் அரசியல் சட்டத்தை மாற்றிக்கொண்டிராமல், மெட்ராஸ் ஸ்டேட் என்பதற்கு தமிழில் சென்னை ராஜ்யம் என்று எழுதுவதற்குப் பதில் தமிழ்நாடு என்று எழுதுவது சட்டத்திற்கு
12-30 p.m. விரோதமாக இருக்கப் போவதில்லை. இன்றைக்கு இப்போதுள்ள அரசியல் சட்டத்தை மாற்ற வேண்டிய அவசியமில்லை. அந்த முறையிலே தான் நாம் இப்போது இதை ஏற்றுக்கொள்ள முடியுமென்கிற கருத்தை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே மாதிரி இப்போது இந்தியாவுக்கு பாரத் என்று வைத்திருக்கிறார்கள். இச்சொல் உள்நாட்டிலே வழங்கிக் கொள்வதற்குத் தான் பயன்படுத்திக் கொள்ளப்படுகிறதே தவிர, ஆங்கிலத்தில் இந்தியா என்ற பதம் தான் உபயோகிக்கப்படுகிறது. வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் கடிதங்களிலும் இந்தியா என்ற பெயர் தான் உபயோகப் படுத்தப்படுகிறது. இந்தியா என்பது தான் உலகம் முழுவதும் வழங்கக்கூடிய சொல். அந்த அடிப்படையில் தான் இந்த முடிவை இந்தச் சபை ஏற்றுக்கொள்ளுமென்று நம்புகிறேன்.

24th February 1961] [Sri C. Subramaniam]

அதேபோல் இம்முடிவைப் பொதுமக்களும் ஏற்றுக்கொள்வார்க ளென்று நம்புகிறேன். இதை அனைவரும் ஏற்றுக்கொண்டு, இனி எவ்வித கிளர்ச்சியிலும் ஈடுபட மாட்டார்களென்று நம்புகிறேன். கிளர்ச்சிகள் வேண்டாமென்று சொல்லவில்லை. இந்தத் திட்டங் கள் நிறை வேற்றப்பட வேண்டும். இந்தத் திட்டங்கள் நிறை வேற்றப்பட வேண்டும் என்று எங்களுக்கு யோசனைச் சொல்லக் கூடிய கிளர்ச்சிகளாய் இருந்தால் அதை நாங்கள் வரவேற்போம். அத்தகைய கிளர்ச்சி எங்களுக்கு உற்சாகமூட்டக் கூடியதாகவும் இருக்கும். இனி அந்த மாதிரி முறையிலே எதிர்க் கட்சிகள் பணியாற்ற வேண்டுமென்ற கருத்தை நான் வலியுறுத்த ஆசைப் படுகிறேன். ஆகவே இந்தப் பிரச்னைக்கு நாங்கள் செய்திருக்கக் கூடிய இந்த முடிவு எல்லோராலும் பாராட்டப்படும் என்று நம்பு கிறேன். ஆகவே இந்த முடிவை இந்தச் சபையும் ஏற்றுக் கொண்டு, இனிமேல் இந்தப் பெயர் வைக்கும் பிரச்னையில் யாரும் அனாவசியமாக ஈடுபடத்தேவையில்லை என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். அதே சமயத்தில் இந்நாட்டில் இருக்கக்கூடிய மற்ற மொழி பேசக்கூடிய அனைவருக்கும் இங்கு சகல உரிமை களும் உண்டு என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தமிழே தெரியாத ஒருவர் இங்கிருந்தாலும், அவருக்கும் எல்லா வித உரிமைகளும் கொடுக்கப்படும். இந்த அடிப்படையிலே தான் நம்முடைய அரசாங்கம் நடைபெற வேண்டும், தமிழ் மக்களும் நடந்து கொள்ளவேண்டும் என்ற எனது கருத்தை வலியுறுத்திக் கொண்டு, அந்த முறையில் நான் சொன்னவைகளை ஏற்றுக் கொண்டு, திரு. சின்னதுரை அவர்கள் தயவுசெய்து மேலும் இதை வலியுறுத்தாமல், வாபஸ் வாங்கிக் கொள்ளும்படி கேட்டுக்கொள் கிறேன்.

**Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, துவக்கத்தில் பல்வேறு விஷயங்களைக் குறித்து கனம் அமைச்சர் அவர்கள் தன்னுடைய கருத்தைத் தெரிவித்து, பிரதான தீர்மானத்தைப் பற்றிக் கூறும்போது, இந்தச் சபையின் கவனத்தை வேறு பாதைக்குத் திருப்புவதற்கு ஒரு சிறிய முயற்சி செய்து, கடைசியிலே முடிக்கிறபோது ஓரளவுக்கு மகிழ்ச்சிகர மான ஒரு அறிவிப்பை வெளியிட்டதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். அவர் இரண்டு காரணங்களைக் குறிப்பாகச் சொன்னார்கள். தமிழ் நாடு என்ற பெயரானது ஏற்கனவே மெட்ராசுக்கு பெயராக இருக்கிறதென்றும், அது உலகச் சிறப்புக்கு ஈடாகாது என்றும் கூறினார்கள். ஆரம்பத்திலே இது கொஞ்சம் நமக்கெல்லாம் கஷ்டமாக இருக்கலாம், அனுபவத்திலே பின்னால் இதுவே லாபமாகவும் ஏற்படலாம் என்று சொன்னார்கள். இப் போதுள்ள கீர்த்தி தற்காலிகமானதாக இருக்குமென்று நான் நினைக்கிறேன். பின்னால் இது நன்மையாகத் தான் முடியும். அந்த வகையிலே பார்க்கும்போது அல்லது எந்தவகையில் பார்த்தாலும், தமிழ் நாடு என்று பெயரிடுவது மிகவும் பொருத்த மானதாக இருக்கும். அதற்காக அரசியல் அமைப்பும் பொருத்த மாகத் தான் இருக்கக்கூடும்.

[Sri P. S. Chinnadurai] [24th February 1961

தமிழ்நாடு என்று பெயரிடுவதன் மூலம், தமிழ் நாட்டிலே வாழ்கின்ற மக்கள் மத்தியிலே பாஷைப் பாகுபாடு இருக்கக் கூடாதென்று இரண்டாவது காரணம் சொன்னார்கள். அது ஓரளவுக்குத் தான் உண்மை. அது ஓரளவு இருக்கிறதென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும், பெரும்பாலான மக்கள், தமிழ் மாகாணத்திலே வாழ்கின்ற மக்கள், தமிழ் நாடு என்று பெயரிடுவது தான் மிகவும் நல்லது என்று விரும்புகிறார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்விஷயம் அவர்களுக்கும் தெரியாததல்ல. இதனால் தமிழ் மொழி உணர்ச்சியானது வெறியாக மாறி விடுமென்று நாம் கருதுவதற்கில்லை. காரணம், இந்தத் தீர்மானம் கொண்டு வந்திருக்கிற அடியேன் வீட்டிலே தெலுங்கு மொழி பேசக்கூடியவன் தான். என்னுடைய மூதாதையர்கள் என்றோ ஒருநாள் தெலுங்கு நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்குக் குடியேறியவர்கள் தான். ஆனால் எல்லா விதத்திலும் எண்ணிப் பார்த்தால், என்னுடைய மாகாணம் எதுவென்று எண்ணிப் பார்க்கும்போது தமிழ் நாட்டைத் தான் நாடுகிறது. மற்றவற்றை என்னால் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை. இது மாகாணப் பித்து அல்லது மாகாண வேகம் என்று தான் சொல்லலாம். என்னுடைய ரத்தத்திலுள்ள ஒவ்வொரு அணுவிலேயும் தமிழ் நாட்டுப் பண்பாடு தான் ஊறிப் போய் இருக்கிறது என்பதிலே சந்தேகமில்லை. இந்த முறையிலே நான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன் என்றாலும், தமிழ் நாட்டிலே இருக்கக்கூடிய இதர மொழி பேசுபவர்களும் இம் மாகாணத்திற்குத் தமிழ் நாடு என்று பெயர் வைப்பதை விரும்ப மாட்டார்கள் என்று சொல்வதற்கில்லை. அப்படிப் பெயரிடுவதால், இன்றைக்கு இருக்கக்கூடிய, இன்றைக்கு நிலவுகின்ற சுமுகமான நிலை குறைந்து விடுமென்றும் சொல்வதற்கில்லை. மேலும் சுமுகமாக வாழ்வதற்கே இது வழி செய்யுமென்பதை நான் சர்க்காருக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இவையெல்லாம் எப்படியிருந்தாலும், என்னுடைய தீர்மானத்தின் பொதுக் கருத்துக்களை, கொள்கைகள் பூராவையும் நமது ராஜ்ய சர்க்கார் ஒப்புக் கொண்டது மிகவும் மகிழ்ச்சி தரக்கூடியது என்பது என்னுடைய அபிப்பிராயமாகும். இந்தத் தீர்மானத்தின் வாசகங்கள் பூராவையும் அப்படியே எடுத்துக் கொள்ளவில்லை என்றாலும், தமிழ் நாடு என்று பெயரிட வேண்டுவதற்கான தகுந்த ஏற்பாடுகளைச் செய்ய தக்க நடவடிக்கைகள் எடுப்பதாக ராஜ்ய சர்க்கார் கூறியுள்ளது என்னுடைய தீர்மானத்தை ஒத்ததாக இருக்கிறது. என்னுடைய தீர்மானத்தில் எப்போது இந்தப் பெயரை வைக்க வேண்டுமென்று தேதிகூட நான் குறிப்பிடவில்லை. அதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று ராஜ்ய சர்க்கார் சிபார்சு செய்ய வேண்டுமென்பது தான் என்னுடைய தீர்மானம். ஆகவே இந்தத் தீர்மானக் கருத்துக்களை ராஜ்ய சர்க்கார் ஒப்புக் கொண்டதும், இன்றைக்கு நாட்டிலுள்ள எல்லா மக்களும் எதிர்பார்க்கக்கூடிய ஒரு நல்ல முடிவை இந்தச் சட்ட மன்றத்திலே கனம் நிதி அமைச்சர் அவர்கள் வெளியிட்டதும் உண்மையிலேயே பாராட்டத் தகுந்தது தான்.

24th February 1961] [Sri P. S. Chinnadurai]

ஆனல் ஒரே ஒரு குறை. அரசியல் சட்டத்திலே தமிழ் நாடு என்று இப்போதைக்கு மாற்ற மாட்டோம் என்று சொல்கிருர்கள். நான் நினைக்கிறேன், உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுக்கிருர்கள் என்று. ஆகையால் சர்க்காரின் உணர்ச்சிக்கு நானும் மதிப்புக் கொடுக்கவேண்டும். அதனலே இப்போதே உடனடியாக அரசியல் சட்டத்திலே மாறுதல் செய்யவேண்டுமென்ற அவசியமில்லை என்று நினைக்கிறேன். இந்த உணர்ச்சிகூட, காலப்போக்கிலே மாறிவிடு மென்று நினைக்கிறேன். அப்போது அது அரசியல் சட்டத்திலே யும் மாற்றப்பட்டு விடும்.

கனம் அமைச்சர் அவர்கள் சென்னை ராஜ்யத்திற்குத் தமிழ்நாடு என்று பெயரிடப்படும் என்று கூறினர்கள். இனிமேல் தமிழ் நாடு சர்க்கார் என்றும், தமிழ்நாடு சட்டசபை என்றும், தமிழ்நாடு சட்டசபைக் காரியாலயம் என்றும், அதேபோல் சென்னை என்ற பதம் வரும் இடங்களில் எல்லாம் தமிழ் நாடு என்று இனிமேல் உபயோகிக்கப்படும் என்றும் நினைக்கிறேன். ஆகவே நாளைய பட் ஜெட்டிலேகூட சென்னை என்று வரக்கூடிய பகுதிகளிலே தமிழ் நாடு என்றும், சென்னை சர்க்கார் வரவு செலவுக் கணக்கு என்ப தற்குப் பதில் தமிழ்நாட்டு வரவு செலவுக் கணக்கு என்றும் போடப்படுமென்று எதிர்பார்க்கிறேன். அப்படியானல், எல்லா வகையிலும் என்னுடைய கொள்கையை சர்க்கார் ஒப்புக்கொண்ட தற்கு நான் நன்றி கூறுகிறேன். தார்மீக ரீதியிலே தமிழ் நாட்டி லுள்ள மக்களின் பொதுவான வேண்டுகோளுக்கு மதிப்புக் கொடுக் கப்பட்டிருக்கிறது. தார்மீக ரீதியிலே இதை எல்லோரும் வர வேற்பார்கள். இது மக்களுக்கும் பூரண வெற்றி; சர்க்காருக்கும் பூரண வெற்றி. இந்த வெற்றியிலே நாம் எல்லோரும் மகிழ்ச்சி கரமாக இருக்கலாம் என்று சொல்லிக்கொண்டு, இந்தத் தீர் மானத்தை இனிமேல் வலியுறுத்த வேண்டியது அவசியமில்லை என்று கருதி, அதை வாபஸ் பெற்றுக்கொள்ள அனுமதிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: நிதி அமைச்சர் அவர்கள் இதற்குப் பதில் சொல்ல வேண்டுமென்ருல், பின்னல் பதில் சொல்லலாம்.

(The Hon. Minister indicated that he did not want to reply.)

SRI M. KALYANASUNDARAM: I want a clarification from the Hon. Finance Minister, Sir. நிதி அமைச்சர் அவர்கள் கூறியவைகளை வரவேற்க வேண்டியது தான். இருந்தாலும், நான் அவர்களுக்குச் சொல்லக்கூடிய யோசனை என்னவென்ருல், இவ் வளவு முன்னேற்றமான முடிவுக்கு வந்த பிறகு, இதை எல்லோரும் ஒப்புக்கொண்டு சுமுகமாக ஆதரிப்பார்களென்பது எனது அபிப் பிராயமாகும். இந்தத் தீர்மானத்தை வாபஸ் வாங்க அனுமதிக்க வேண்டுமென்று ஸ்ரீ சின்னதுரை அவர்கள் கேட்டுக்கொண்டிருக் கிருர்கள். அதற்கு நான் சம்மதிக்கவில்லை. நான் யோசனை சொல்ல விரும்புவது என்னவென்ருல், இந்த அரசாங்கம் இந்தச்

[Sri M. Kalyanasundaram] [24th February 1961

சபையிலுள்ள மற்ற எல்லாக் கட்சித் தலைவர்களையும் கட்சி அடிப்படையில் கூப்பிட்டு, இந்த யோசனையை வைத்து, எல்லாக் கட்சிகளும் இதை ஏற்றுக்கொள்ளும்படி ஏற்பாடு செய்யவேண்டும்.

MR. SPEAKER : The hon. Member is making a speech. இந்த யோசனை இங்கு எப்படிப் பொருந்தும்?

SRI M. KALYANASUNDARAM : இந்த யோசனையை அவர்கள் சுமுகமாகத் தீர்ப்பதற்கு ஒப்புக்கொள்ள முடியுமா என்று பார்க்க வேண்டும். அதோடு, இது தற்காலிக ஏற்பாடா அல்லது அரசியல் சட்டத்தைப் பின்னால் திருத்திக்கொள்ள முடியுமா என்பதையும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை நடைமுறையில் கொண்டுவருவதிலே ஏதாவது சிக்கல் இருக்குமானால் கட்டாயம் எல்லாத் தலைவர்களையும் கலந்து ஆலோசிப்பதற்கு எப்பொழுதுமே சர்க்கார் தயங்காது. நான் சொல்லுகிற முறையில் எந்தவிதமான சிக்கலும் ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை. ஆகவே, இதை உடனடியாக நடைமுறையில் கொண்டு வருவதில் கஷ்டம் இருக்காது. அப்படி ஏதாவது கஷ்டம் ஏற்பட்டால் எல்லோரையும் கலந்து ஆலோசிப்பதற்கு நாங்கள் தயங்கமாட்டோம்.

(Sri K. Anbazhagan rose.)

MR. SPEAKER : No, no. . . .

SRI K. ANBAZHAGAN : It is a policy decision which the Hon. Minister has announced and . . .

MR. SPEAKER : No. I am governed by the Rules. I cannot go against the rules. If the hon. Member will quote the rule under which he wants to speak, I have no objection to all him. Rule 75 says, " A member who has moved a substantive motion may speak again by way of reply . . . . . . . " இப்பொழுது பிரச்னை என்னவென்றால் திரு. சின்னதுரை அவர்கள் தீர்மானத்தை வாபஸ் வாங்கிக்கொள்ளுவதற்கு சபை அனுமதி கொடுக்கிறதா, இல்லையா என்பதுதான். அனுமதி கொடுத்தால் 'கொடுக்கிறோம்' என்று சொல்லுங்கள்"

குரல்கள் : 'கொடுக்கிறோம்'

MR. SPEAKER : சரி, எல்லோரும் ஒப்புக்கொண்டால் 'ஆல் ரைட்'. I need not put it to vote.

(ஸ்ரீ கல்யாணசுந்தரம் எழுந்திருந்தார்.)

எல்லோரும் ஒப்புக்கொண்டால் நீங்கள் மாத்திரமா 'மாட்டேன்' என்று சொல்லப்போகிறீர்கள்?

SRI M. KALYANASUNDARAM : Even if one Member objects, the motion has to be put to vote. I want it to go on record that I am not a party to this decision.

24th February 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM: The hon. Member's objection is not to the grant of leave for withdrawal of Mr. Chinnadurai's Resolution, but to the decision of the Government.

SRI M. KALYANASUNDARAM: Yes. I am against the decision of the Government in refusing to amend the Constitution.

The Resolution was, by leave, withdrawn.

(2) EDUCATIONAL AND OTHER CONCESSIONS TO CHRISTIANS BELONGING TO HARIJAN BACKWARD AND MOST BACKWARD CLASSES.

SRI S. LAZAR: Mr. Speaker, Sir, I shall now move the Resolution standing in my name, namely :—

"This House recommends to the Government that Christians belonging to the Harijan, Backward and Most . . ."

MR. SPEAKER: சபையை விட்டு வெளியே போகும் அங்கத்தினர்கள் சப்தம் இல்லாமல் போகவேண்டும். கனம் திரு. லாஸர் அவர்கள் பேசுவது எனக்கே சரியாகக் கேட்கவில்லை. கனம் அங்கத்தினர்களுக்கு எப்படிக் கேட்கும்? . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: Mr. Speaker, Sir, I would suggest that after this important decision, Members would like to relax and therefore may I suggest that we adjourn now. I am not moving a motion now.

MR. SPEAKER: I have no objection. But one thing. Let Mr. Lazar move his Resolution today and continue his speech on the next non-official day; otherwise, his Resolution will have to come by ballot again.

SRI S. LAZAR: Sir, I move—

"This House recommends to the Government that Christians belonging to the Harijan, Backward and Most Backward Classes be treated on a part with Harijan, Backward and Most Backward Classes respectively, in the matter of admission to colleges, recruitment to Government service (s) and grants of educational concessions, scholarships, subsidies and loans and that separate provision should be made for such Christians for the said purposes on the population basis."

SRI V. K. KRISHNAMURTHY: I second the Resolution, Sir.

MR. SPEAKER: Is it the desire of the House that we adjourn now?

VOICES: Yes, yes.

MR. SPEAKER: I now adjourn the House to meet again at 8-30 a.m. tomorrow. 12-45 p.m.

The House then adjourned.